# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



அசத்துகிறார் அண்ணி!

KALKI • 30.11.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



பாடகியாகிறார் குஷ்பு!

சட்டக்கல்லூரி விவகாரம் - ஷாக் அடிக்கும் உண்மைகள்!



# தேர்தல் பிரசாரத்தில் விஜய்?

DHOLIKAS
DIAMONDS

# அன்பை சொல்ல ஆயிரம் பரிசு...
# ஆயிரமும் அடங்குமே..
# வைர நகை ஒன்றில்!

**Diamonds with D-E-F Colour**
**Diamonds with IF, VVS1 Clarity**

Diamond Collections


Rs. 6900/-


Rs. 9500/-


Rs. 60000/-

ஏராளமான டிசைன்களில்...
டைமண்ட், ஆன்டிக் ஜுவல்ஸ்,
ரியல் ஸ்டோன்ஸ், போல்கி டைமண்ட்
நகைகள் அணிவகுக்கும்
தென்னிந்தியாவின் முதல் காட்சிக் கூடம்.



## ஸ்ரீ குமரன்™
## தங்கமாளிகை

இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை
தி சென்னை சில்க்ஸ் அருகில்

சென்னை • கோவை • திருப்பூர் • ஈரோடு • திருச்சி

Shop online at www.sktm.in | கடையுடன் கூடிய விசாலமான கார் பார்க்கிங்

● வி.சிவசங்கர், கள்ளக்குறிச்சி

**கடவுள் பூமிக்கு அனுப்பும் கடைசி மனிதன் எப்படி இருப்பான்...?**

கடைசி மனிதன் அடுத்து வரப்போகும் யுகத்தின், முதல் மனிதனாக இருப்பான். கடவுள், முன்பு தான் செய்த தவறைச் சரிசெய்ய இம்முறை அம்மனிதனை, ஆப்பிள் கடிக்க முடியாதபடி பல்லில்லாத பொக்கையான ஆதாமாக அனுப்புவார்.

● எம்.அசோக்குமார், அரவக்குறிச்சிப்பட்டி

**மரண பயம் என்பது எப்படி இருக்கும்?**

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல நான் 'கோஸ்ட்-ரைட்டராக' மாற வேண்டும். பய-டேட்டா வாழ்க்கைக்குத்தான். பயத்துக்கு டாட்டா மரணத்தில்!

ஆனாலும், டாட்டா சொல்ல கொஞ்சம் பயமாதான் இருக்கு!

● என்.கிருஷ்ணன், மதுரை

**உண்ணாவிரதம், மௌன விரதம் இரண்டில் எது கஷ்டம்...?**

வாயைக் கட்டிப் போட்டாலும் போடலாம்; வயிற்றைக் கட்டிப் போட முடியாது. காலியான வயிறு, சத்தம் போட்டுப் பேசி 'உண்ணா ப்ளஸ் மௌன விரதம்' இரண்டையும் கலைத்து விடும்.

# பயத்துக்கு

● த.புகழேந்தி, கூகூர்

**ஒரு மருமகளை ஒரு மாதிரியாகவும், இன்னொரு மருமகளை வேறு ஒரு மாதிரியாகவும் பார்க்கும் மாமியாரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்...?**

அந்த மாமியாருக்கு ஒன்றரைக் கண் என்று நினைக்கிறேன்.

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

**மகாபாரதத்தில் வள்ளல் தன்மைக்குக் கர்ணன் பாத்திரம்... அதே மகாபாரதத்தில் கஞ்சத்தனமான கதாபாத்திரம் எது...?**

ஐந்து பிள்ளைகளுக்கு ஒரே ஒருத்தியைக் கட்டிவைத்து, பஞ்ச பாண்டவர்களைக் கஞ்ச பாண்டவர்களாக்கிய குந்தி.

# கிரேஸியைக் கேளுங்கள்

● ரா.பிரசன்னா, மதுரை

*ஒரு நாளைக்கு 24 மணி நேரம் இருந்தாலும், பத்த மாட்டேங்குதே கிரேஸி... என்ன செய்யலாம்...?*

காலண்டருடன் தொங்கி
கடிகாரத்துடன் சுற்றி
காலப் போக்கில்
கணிதமாகாதே...
கண்மூடி காலத்தை வென்று
புனிதமாகு!

● பி.கிருஷ்ணன், ஆதம்பாக்கம்

*சிலப்பதிகாரத்தில் தங்களைக் கவர்ந்த பாத்திரம் எது?*

'உன்னை விட உன் தம்பி பெரும் புகழும் பெறுவான்' என்று ஜோஸ்யன் சொன்னதைக் கேட்டு அண்ணனின் முகம் வாடியது. அண்ணனின் வருங்காலக் கவலையைப் போக்க, அன்றே துறவறத்தை மேற்கொண்டான் தம்பி. தந்தையின் காதலுக்காக பிரம்மச்சரியம் ஏற்றுக்கொண்ட பீஷ்மரின் சபதத்துக்குச் சமமானது, அந்தத் தம்பியின் தியாகம். அந்த அண்ணன் சேரன் செங்குட்டுவன், தம்பி ஜோஸ்யன் சொன்னதுபோல அண்ணனைவிட பெரும் புகழும் பெற்ற, சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோ அடிகள்.




● சகுந்தலா ராகவன், சென்னை

*அஞ்சு பொண்ணுங்களைப் பெத்தவன் ஆண்டி... அப்ப அஞ்சு புள்ளைங்களைப் பெத்தவன் என்ன...?*

அந்த ஆண்டிக்கு சம்பந்தி!




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி
உதவி ஆசிரியர்: கதிர்பாரதி
வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்

தொலைபேசி: 044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு: marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்: info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**தே.மு.தி.க.வின் பிரசாரப் புயலாக அசத்துகிறார் பிரேமலதா விஜயகாந்த். இதோ சில சாம்பிள்கள்...**

"ஆயிரம் மெகாவாட் பற்றாக்குறையாக இருக்கும் என்று அமைச்சர் அறிக்கை விடுக்கிறார். இந்த ஆயிரம் மெகாவாட்டை ஈடுகட்ட முடியாதா? முடியும். மின் சக்தியைக் கடத்தும்போது வீணாகும் மின்சாரம், திருடப்படும் மின்சாரம் இவையிரண்டையும் தடுத்தாலே 17 சதவிகிதம் மின்சக்தியை பயன்பாட்டுக்குத் திருப்ப முடியுமே! சூரிய சக்தியைப் பயன்படுத்தி லாந்தர் விளக்குகள் வந்துள்ளன. இவற்றை வீட்டுக்கு வீடு, குறிப்பாக கிராமப்புறங்களில் விநியோகிக்கலாம். அரசு அலுவலகங்கள், மருத்துவமனைகளில் சூரிய சக்தியைப் பயன்படுத்தி மின் தேவையை ஈடுகட்டலாம். இப்படி எவ்வளவோ இருக்கு. ஆனால் இங்கே என்ன நடக்கிறது? ஒருவர் மேல் ஒருவர் பழியைப் போட்டுக்கொண்டு காலம் கடத்துகிறார்கள்" சற்று ஆவேசமாகப் பேசுகிறார் பிரேமலதா.

**மேடைப் பேச்சில் அசத்துகிறீர்களே எப்படி?**

"நானும், கேப்டனும் வெளிநாடுகளுக்குப் போகும் போதெல்லாம் அங்கே மக்கள் செழிப்பாக இருப்பதைப் பார்த்து, வியந்து போவோம். 'எல்லா வளமும் உள்ள நமது நாட்டில், ஏன் மக்கள் இன்னமும் ஏழ்மையில் உழன்று கொண்டிருக்கிறார்கள்?' என்ற கேள்வியே மேலோங்கும். 'ஒரு புதிய சக்தி. அரசியலில் வர வேண்டும்; அது மட்டுமே பெரிய அரசியல் மாற்றங்களைக் கொண்டு வரும்' என்று சிந்தித்திருக்கிறேன்! அந்த அடிப்படையில் நாட்டுநடப்புகள், சமூக மாற்றங்களைக் கூர்ந்து கவனிக்கிறேன். தினப் பத்திரிகைகளைப் படிப்பேன். பெரும்பாலும் செய்தி சேனல்களைத்தான் பார்ப்பேன். சீரியல் பார்ப்பது கிடையாது. சமூகம், அரசியல் சார்ந்த புத்தகங்கள் படிப்பேன். எதைக் கேட்டாலும், நிதிப் பற்றாக்குறை என்று சொல்லுகிறது அரசாங்கம். ஸ்பெக்ட்ரம் விவ



காரத்தில் அரசுக்கு 60,000 கோடி வருமானம் இழப்பு என்றால் நிதி எங்கே இருக்கும்?''

**தே.மு.தி.க.வில் உங்கள் பொறுப்பு?**

''ஓர் அடிப்படை உறுப்பினர். அவ்வளவுதான். கேப்டனுக்குப் பக்கபலமாக இருக்கிறேன். கட்சி நிர்வாகத்தில் என் பங்களிப்பு ஒன்றும் கிடையாது. எனக்கு எந்தப் பொறுப்பும் தேவையில்லை. நான் கட்சி அலுவலகத்துக்குக்கூடப் போவதில்லை. கேப்டனின் சார்பாக, கட்சித் தொண்டர்கள் வீட்டுத் திருமணங்களுக்குச் செல்வது; தே.மு.தி.க. பொதுக் கூட்டங்கள், பேரணிகள், ஆர்ப்பாட்டங்களில் கலந்து கொள்வது; தேர்தல் பிரசாரம் செய்வது; இவ்வளவுதான் நான் செய்வது.''

**தமிழ்நாட்டு அரசியலில் 'அம்மா' என்ற சொல் கொச்சைப்படுத்தப்பட்டதாகப் பேச்சு. இந்த நிலையில் உங்களை 'அண்ணி' என்றழைப்பதைப் பற்றி...**

''பொது மக்களுக்கு தே.மு.தி.க. என்ற கட்சியைப் பற்றி மூன்று வருடங்களாகத் தான் தெரியும். ஆனால் இது 25 வருடக் கட்சி. ஆம்! கேப்டனின் ரசிகர் மன்றங்கள் தானே கட்சிக்கு அடிப்படை. அந்த மன்றத் தோழர்களுக்கு கேப்டன் அண்ணன் என்றால், நான் அண்ணி. ஏதோ தே.மு.தி.க. துவங்கியதற்குப் பிறகு என்னுடன் ஒட்டிக் கொண்டதல்ல 'அண்ணி'. அவர்கள் பாசத்துடன் அழைப்பதில் என்ன தவறு?''

**நீங்கள், உங்கள் தம்பி ஆகியோரது பிடியில்தான் கட்சி இருக்கிறதா?**

''மனப்பூர்வமாகச் சொல்கிறேன். நாங்களெல்லாம் கேப்டனின் அரசியல் செயல்பாடுகளுக்குப் பக்கபலமாக மட்டுமே இருக்கிறோம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக மற்ற சில கட்சிகளில் குடும்ப உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படும் பதவிகள், செல்வாக்கு ஆகியவற்றை வைத்து அதே கண்ணோட்டத்தில் எங்களைப் பார்க்கிறார்கள். இது தவறு.''

**மைனஸ் விஜயகாந்த் - பிரேமலதா?**

''ஐ.ஏ.எஸ். அதிகாரி, டாக்டர் என்று பல வரன்கள் வந்தன. அப்படி கல்யாணம் நடந்திருந்தால் குடும்பப் பெண்மணியாக மட்டுமே வாழ்க்கை முடங்கிப் போயிருக்கும். எனக்குக் கிடைத்த பெரிய பாக்கியம், கேப்டன் என்னைத் திருமணம் செய்து கொண்டது. இதன் மூலம் குடும்பப் பொறுப்புடன், பொதுப் பணியிலும் என்னை ஈடுபடுத்திக்கொள்ள முடிகிறதே! கேப்டன்தான் எனது எனர்ஜி!

**- ப்ரியன்**

படம்: ஸ்ரீஹரி

# கேப்டன்தான் எனது எனர்ஜி!

## - பிரேமலதா விஜயகாந்த் பேட்டி

# ஆள்-பிஃப்டி: ஆடை-பிஃப்டி!

**அழகுக்கு மதிப்பெண் 100 என்றால், அதில் ஆள் பாதி ஆடை பாதி என்பதே உண்மை. குண்டாக இருக்கும் உங்களை ஒல்லியாக மாற்றும் ஹெல்த் டிப்ஸும், அழகி போல் காட்டும் டிரஸ் டிப்ஸும் சேர்த்து இந்த வாரம் ஒரு இளமை கான்ஃபிரன்ஸ்...**

## ஆள்-பிஃப்டிக்கு...

● லைஃப் ஸ்டைலை மாற்றி நாம் இளைத்தால் எப்படியெல்லாம் இருக்கும் என கற்பனையில் உங்களை விஷுவலைஸ் பண்ணவும்.

● 'பரம்பரையே குண்டு. அதான் நானும் வெயிட் போட்டுட்டேன்' என்ற சாக்கெல்லாம் வேண்டவே வேண்டாம். எதற்கெடுத்தாலும் காரில், ஸ்கூட்டரில் போவதை நிறுத்திவிட்டு நடை பழகவும். பக்கத்திலிருக்கும் மளிகைக்கடை, மார்க்கெட், குழந்தைகளைக் கொண்டுவிட்டு, கூட்டி வர... என சகல வேலைகளுக்கும் காரை நம்பாமல் கால்களையே நம்புங்கள்!

● உடல் நனைய நனைய வியர்வை ஊற்றெடுக்க கடின எக்ஸர்சைஸ் செய்துவிட்டு, 'பாவம் நாம, ரொம்ப வருத்திண்டுட்டோம்' என ஐஸ்க்ரீம், ஜாங்கிரி, போளி... என கபளீகரம் செய்யாதீர்கள். நல்ல வொர்க் அவுட்டுக்குப் பிறகு அருமையான குளியல் அல்லது இதமான மஸாஜ்தான் நீங்கள் உங்கள் உடலுக்குக் கொடுக்கும் சரியான ரிவார்ட்!



● ஏதாவது பார்ட்டி, திருமணத்துக்குப் போனால் பஃபே முறை சாப்பாடு என்றால் அவாய்ட் பண்ணவும். இதில் என்ன ஆகும் என்றால் தட்டு வழிய ரொப்பி, பயங்கரமாகச் சாப்பிட்டுத் திணறி வழிய நேரிடும்.

● டைனிங் டேபிளில் உட்காருவது, சாப்பாட்டை அட்டாக் பண்ணி பரபரவென உள்ளே தள்ளுவதற்கென டார்கெட் வைக்காதீர்கள். மெல்ல நிதானமாகச் சாப்பிடவும். நீங்கள்தான் கடைசியாக எழுந்திருக்க வேண்டும். அந்த அளவு ஸ்லோ பார்ட்டி ஆகணும்!

● 'ஹெல்த் ஸ்டோரில் வாங்கிருக்கேன், ஆர்கனிக் அப்படின்னு போட்டிருக்கு'ன்னு வகை தொகையில்லாமல் மேய்ந்தீர்கள் என்றால் ஆபத்துதான். வறுவல், சிப்ஸ் ஆர்கனிக் என்றாலும், உங்கள் உடலில் வெயிட்டாக மாறி உட்கார்ந்து விடும்.

● சாலட் சாப்பிட்டால் நல்லது. அதற்காக டாப்பிங்ஸ் என்ற பெயரில் ரிச்சாக சாமானைக் கொட்டி ஒரு கை பார்த்தீர்களா

னால் - ஒல்லியாவது ஒண்ணாவது!

● வாரத்தில் ஒரு நாள் உங்களுக்கே நீங்கள் ஒரு ஸ்மால் ட்ரீட் கொடுத்துக் கொள்ளலாம். ஒரு குட்டி பர்கர், சாக்லேட் குக்கீஸ், சின்னூண்டு பேஸ்ட்ரீ... என இருக்கலாம். ஆனால் வாரத்தில் ஒரே ஒரு தடவை என்பதை நன்றாக ஞாபகம் வைக்கவும்.

● யோகா, ப்ராணயாமம் கண்டிப்பாகச் செய்யவும். உடல், மனம் இரண்டிலும் மாற்றம் வருவதைக் கண்கூடாகப் பார்ப்பீர்கள்.

# உடையழகு...



# நடையழகு...



## ஆடை - பிஃப்டிக்கு

● கறுப்பு, டார்க் பிரௌன் கலரில் உடையணிந்தால் ஸ்லிம்மாகக் காட்சியளிப்பீர்கள். அதற்காக யூனிஃபார்ம் மாதிரி எப்போதும் இதே கலரில் வளைய வராதீர்கள்.

● பாகீஸ் எனப்படும் லூஸ் உடையைத் தவிர்க்கவும். குண்டாக இருப்பவர்கள் சங்கோஜம் காரணமாக, டைட்டாக உடையணியாமல் தொளதொளவெனப் போடுவார்கள். அப்படிப் போட்டால் மேலும் பூதாகாரமாகத்தான் தெரியும்.

● குண்டாக இருக்கும் பெண்கள் அனார்கலி அல்லது எம்பயர் கட் சல்வார் கமீஸ் போடாதீர்கள்.

பெரிய பெரிய பிரிண்ட், பூக்கள், டிஸைன் போட்ட ஆடைகள் வேண்டாம். டைட்டாக பெல்ட் போடுவதைத் தவிர்க்கவும். வீ-நெக் டாப்ஸ் போடலாம்.

கடைசியாக...கான்ஃபிடண்டாக இருக்கவும். தன்னம்பிக்கைதான் அழகு என்ற தாரக மந்திரத்தை அடிக்கடி மனத்தில் படிக்கவும். இதை நடைமுறைப் படுத்தினால், 'ஆள் பிஃப்டி ஆடை பிஃப்டின்னு உங்களை 100% அழகியாக்கி யிடும்'னு ஜக்கம்மா அடிச்சு சொல்றா ஆரோக்ய ஆருடம்!

**- லதா சேகர்**

# சீதா இழந்த

'சித்தி' ஷூட்டிங் ஆரம்பித்த இரண்டாவது நாளிலேயே நொந்து போனேன். நடிக்கவும் வேண்டும்; புரொடக்ஷனையும் பார்த்துக்கொள்ள வேண்டும். மனம் ஒத்துழைத்தாலும் உடல் ஒத்துழைக்கவில்லை. டைரக்டரை அழைத்தேன்.

''வேண்டாம். நான் நடிக்கலை. சீதா கிட்ட பேசறேன். அவங்களை வைத்து எடுங்க!'' என்றேன். நடிகை சீதாவிடம் கதையைச் சொன்னேன். சீதா மிகவும் யோசித்தார். கடைசி நிமிடத்தில் பின் வாங்கினார்.



''இல்லக்கா. நான் கல்யாணம் பண்ணி செட்டிலாயிட்டேன். வேண்டாமே!'' என்றார். வேறு வழியில்லாமல், நானே நடிக்க வேண்டியதாகிவிட்டது. இப்போது எங்கே என்னைப் பார்த்தாலும் சீதா சொல்வார். ''அக்கா! நான் உங்க பேச்சை அன்னிக்கே கேட்டிருக்கணும்'' என்று.

சீதா 'வேண்டாம்' என்று சொன்ன அந்தக்கணத்தில் நான் முடிவு செய்தேன். 'நமக்குக் கிடைத்த வாய்ப்பை நாம் விடக்கூடாது. எத்தனை நாள் உழைப்பில் கிடைத்த பலன் இது!' எனவே, நானே நடித்தேன். அதற்குப் பலனும் கிடைத்தது.

கிட்டத்தட்ட பத்து வருடங்களாக ஒரே ஸ்லாட்டில் நடித்துக் கொண்டிருக்கிறேன். சித்தி, அண்ணாமலை, செல்வி, அரசி... என்று. 'அண்ணாமலை'யில் நடிக்கும்போதும் அதே பிரச்னை வந்தது. அப்போது நான் கர்ப்பமாக இருந்தேன்.

''என்னை விட்டுடுங்க. வேற யாரையாவது நடிக்க வைங்க!'' என்று டைரக்டரிடம் கிட்டத்தட்ட கெஞ்சினேன். அந்தச் சமயத்தில் என்னைப் பரிசோதித்த டாக்டர்களே நான் நடிக்கக் கூடாது. எனக்கு முழு ஓய்வு தேவை என்று சொல்லியிருந்தார்கள். மருத்துவமனையில் ஒரு பெட்டைப் போட்டுப் படுக்க வைத்துவிட்டார்கள். எங்கள் யூனிட்டைச் சேர்ந்தவர்கள், பானுப்பிரியாவிடம் பேசி, ஒப்புதல்கூட வாங்கிவிட்டார்கள். ஆனால், சன் டி.வி.யில் ஒத்துக் கொள்ளவில்லை.

''மக்கள் ஒன்பதரை மணிக்கு உன்னைப் பார்த்துப் பழகிட்டாங்க. நீ நடிச்சுதான் ஆகணும். வேற வழியே இல்லை'' என்று சொல்லிவிட்டார்கள். அதற்குப் பிறகு உட்கார்ந்தே நடித்தேன். குழந்தை பிறந்த பிறகும் மூன்று மாதம்தான் இடைவெளி விட்டேன். பிறகு நடிக்க ஓடி வந்துவிட்டேன்.

'சித்தி'தான் எனக்கு விமர்சனங்களைப் பாசிட்டிவாக எடுத்துக் கொள்ளக் கற்றுக் கொடுத்தது. ''என்னங்க இது! இந்த வாசு விக்ரம் ரொம்ப பேசிக்கிட்டே இருக்காரு'' என்று ஒரு விமர்சனம் வந்தது. யோசித்தோம். அதற்குப் பிறகு ஒரு மாதத்துக்கு அவரைப் பேசவே விடவில்லை. 'மௌனவிரதம்' என்று சொல்லி, அவர் கையில் ஒரு புல்லாங்குழலைக் கொடுத்துவிட்டோம். மறுபடியும் வாசு விக்ரம் பேச

மாட்டாரா என்று ரசிகர்கள் ஏங்க ஆரம்பித்து விட்டார்கள்.

அதேபோல, தீபா வெங்கட் கேரக்டர். கதைப்படி, அவருக்குக் கல்யாணம் நடந்து, நிறையக் கொடுமைகள் நிகழும். காலில் சூடுகூடப் போடுவார்கள். அதற்கும் நிறைய விமர்சனங்கள் வந்தன. எதிர்கொண்டோம்.

சானலிடமிருந்தும் பிரஷர். 'அது சரியில்லை, இது சரியில்லை' என்று என்னென்னவோ சொன்னார்கள். ஒரு கட்டத்தில் அமைதியாகிவிட்டார்கள். அதற்குப் பிறகுதான் 'சித்தி' நன்றாகப் போகிறது என்கிற விஷயமே எங்களுக்குத் தெரிந்தது.

அந்த நம்பிக்கை வந்ததற்குப் பிறகுதான் சிவகுமார் சாரை நடிப்பதற்குக் கூப்பிட்டேன். உண்மையில், என் கம்பெனியில் என்னைவிட, சீன்ஸியராக இருந்தவர் அவர். தாமதமாகத்தான் ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வருவேன். ஆறு மணிக்கு மேல் ஒரு நிமிடம்கூட ஸ்பாட்டில் இருக்கமாட்டேன். ஆனால் சிவகுமார் நான் கிளம்பிய பிறகுதான் கிளம்புவார்!

சில சமயங்களில் ஆறு மணிக்கு நான் நடிக்க வேண்டிய சீன் முடியாது. இன்னும் ஒரு மணி நேரம் இருந்தால் முடித்துவிடலாம் என்று இருக்கும். அந்தச் சமயங்களில் அவர் வந்து பேசுவார். "ப்ளீஸ்மா! ஒரு ஒன் அவர் இருந்து முடிச்சுக் குடுத்துட்டுப் போயேன்" என்று சொல்வார்! மறுக்க முடியாது.

# வாய்ப்பு!




இப்போது நினைத்துப் பார்த்தால், சிவகுமார் சார் ராடனின் வளர்ச்சிக்கு மிகவும் உதவியாக இருந்தார் என்று தோன்றுகிறது. இந்தக் காலத்தில் அவரைப் போல ஒரு நடிகரைப் பார்ப்பது அதிசயம். 'சித்தி' போன்ற ஒரு வெற்றித் தொடரைக் கொடுக்க முடிந்ததற்குக் காரணம், ஒரு பக்கம் நான் இருந்தேன். இன்னொரு பக்கம் சிவகுமார் சார்

♦ சீதா



இருந்தார்.

தொலைக்காட்சித் தொடர் எடுக்கிறபோது ஒரு வேலையைக் கொடுத்து விட்டால், முடிந்துவிடும் என்று நம்ப முடியாது. பின்னாலேயே வந்து நிற்க வேண்டும். 'கையைத் தூக்கினீங்களா? கீழ வச்சீங்களா? பட்டனை அமுக்கினீங்களா?' என்று குழுவினரிடம் படிப்படியாகக் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும்.

சினிமாவில் இருக்கும் ஒழுங்கை நான் டீ.வி யூனிட்டுக்கும் கொண்டு வர வேண்டும் என்று நினைத்தேன்; கொண்டு வந்தேன்.

என் யூனிட்டுக்கு வருகிற எல்லா இயக்குநர்களோடும் ஆரம்பத்தில் கூடவே இருப்பேன். நம்பிக்கை வந்துவிட்டதா? அதற்குப் பிறகு தலையிட மாட்டேன். என்னுடைய கருத்துக்களை அவர்களிடம் திணிக்க மாட்டேன்.

இன்றைக்கு சன் டீ.வி.யில், ராடன் ஒரு பெரிய புரொடக்ஷன் ஹவுஸ். கலாநிதி மாறன் சாரை எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், அவர் பிஸினஸையும் நட்பையும் போட்டுக் குழப்பிக் கொள்ள மாட்டார். 'சின்ன பாப்பா, பெரிய பாப்பா', 'கோடீஸ்வரன்' என்கிற கேம்ஷோ... என்று எத்தனையோ சன் டீ.வி.யில் பண்ணிவிட்டேன். எல்லாவற்றிலும் ரொம்ப கரெக்டாக இருப்பார் அவர்.

நான் எதிர்கொண்ட பிரச்னைகளில் முக்கியமான ஒன்று, இயக்குநர்களை மாற்றியது. நான் இயக்குநர்களுக்குப் பொதுவாக நிறைய இடம் கொடுக்கிறேன் என்று என் வீட்டிலேயே சொல்வார்கள்.

'உங்களுக்கு என்ன வேண்டும்? நல்ல ஆர்ட்டிஸ்ட் வேண்டுமா, தாராளமான வீடு வேண்டுமா, செலவுக்குப் பணம் வேண்டுமா? எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று நிறைய சுதந்திரம் கொடுப்பேன். அதைத் தவறாகப் பயன்படுத்தினால் நான் என்ன செய்ய முடியும்?

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு பிரச்னை வரும். 'சி.ஜே.பாஸ்கர் போயிட்டார். இனிமே இவங்க என்ன செய்வாங்க?' என்று ஒரு பிரச்னை. ஆனால், அவர்கள் ஒன்றை மறந்துவிடுகிறார்கள். புரொடக்ஷன் கம்பெனியை நம்பித்தான் டீ.வி.யில் ஸ்லாட் கொடுக்கிறார்களே தவிர, டைரக்டர்களை நம்பி இல்லை.

'ராதிகா சன் டீ.வி.யை விட்டுப் போய் விடுவார்' என்று இன்னொரு பிரச்னையும் வந்தது. 'அதுவும் நடக்கவில்லை. எனக்குப் போகிற ஐடியாவும் இல்லை. அவர்களுக்கு என்னை விடுகிற யோசனையும் இல்லை. நான் உழைப்பை நம்புகிறவள். என்னை நம்புகிறவள். பாரதிராஜா சாரின் 'பசும்பொன்' படத்தில் எனக்கு ஏற்பட்ட ஒரு அனுபவத்தைச் சொன்னால் அது புரியும்.

**- பாலு சத்யா**




# கல்கி யின் காலேஜ் விசிட்!

## இது எங்க ஏரியா...
## வாக்களிக்க வாங்க ஜாலியா...

கால்ல சக்கரம் கட்டியாச்சு!
கைகுலுக்கப் புறப்பட்டாச்சு...

உங்க காலேஜ்ல
ரோமியோ யாரு? ஜூலியட் யாரு?
லீடர்தான் யாருப்பா?
செலக்ட் பண்ண
எங்க ரெடி... நீங்க ரெடியா..?



**அடுத்த வாரம் மோர் டீடெய்ல்ஸ்...**

''அழகான உடல்வாகு வேணும்ங்கிறதுக்காகவும், உடல் எடையைக் குறைக்கிறதுக்காகவும் மாத்திரைகளை நம்பி வாழ்க்கையையே தொலைச்சுடறாங்க பலர்'' என்று, இப்போதைய மாத்திரை மோகம் குறித்து தம் ஆதங்கத்தை முன்வைக்கிறார் ஆச்சார்ய ஸ்ரீகிருஷ்ண வர்மா.



'' 'ஸ்டெராய்டு' கலந்த மாத்திரைகளை எடுத்துக்கிட்டு உடம்பு குறைக்க முயற்சிக்கிறவங்க, ஒரு விஷயத்தைத் தெரிஞ்சுக்கணும். அந்த மாத்திரைகள் அவங்க உயிருக்கே ஆபத்தாக முடியற வாய்ப்புகள் அதிகம்.

உடல் பருமன்ங்கிறது ஏதோ ஒன்றிரண்டு மாதங்களில் நடந்திடாது. அதற்கு வருடங்கள் பிடிக்கும். அதுதான் இயற்கை. ஆனால் உடல் எடையைக் குறைக்க, குறைந்தது மூன்று மாதங்களாவது ஆகும்.

மாத்திரையால பதினைந்தே நாட்கள்ல உடம்பு குறையுதுன்னா, அங்கே இயற்கைக்கு மாறான விஷயங்கள்தானே நடக்குது? அந்த 'ஸ்டெராய்டு' மாத்திரைகள் என்ன பண்ணும்னா, உடல் சதையில் இருக்கும் கொழுப்புக்களை மட்டும் குறைச்சுடும்.


* ஸ்ரீ கிருஷ்ணவர்மா

குண்டான உடல்வாகுக்குத் தகுந்த மாதிரி இருக்கிற இதயத்தின் ரத்த ஓட்டம், திடீரென குறைந்துவிட்ட உடம்புக்குத் தகுந்த மாதிரி மாறும். இரத்தத்தை 'பம்ப்' செய்வதில் இதயமும், உடம்புக்குக் கட்டளையிடும் மூளையும், இந்தத் திடீர் மாற்றத்தால தடுமாற்றம் அடையுது. இதனால பக்கவாதம், மாரடைப்பு, மூளை பாதிப்பு போன்ற பேராபத்துக்கள் உருவாக வாய்ப்பு இருக்கு!'' என்று ஸ்டெராய்டு மாத்திரைகளின் மறுபக்கத்தை விளக்குகிறார் டாக்டர் ஸ்ரீ கிருஷ்ணவர்மா.



''தீவிர உடற்பயிற்சி ஏதுமில்லாமலே, கொஞ்சம்

உணவுக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்தாலே மூன்றே மாசத்துல உடம்பைக் கச்சிதமா கொண்டு வந்திடலாம். எளிமையா சில விஷயங்களை வழக்கப்படுத்திக்கிறது நல்லது.

காலையில் எழுந்தவுடன் 'நாடிசுத்தி'ன்னு சொல்லக்கூடிய மூச்சை நன்றாக உள்ளுக்கு இழுத்து வெளியில் விடற பயிற்சி செய்யணும். சராசரியா மூணு லிட்டர் தண்ணீர் குடிக்கணும். கண்டிப்பா இரவு படுக்கைக்குப் போகிறதுக்கு இரண்டு மணி நேரத்துக்கு முன்பே டின்னர் முடிச்சுடணும்! இது உடம்பு ஆரோக்கியத்துக்குச் சிறந்த வழி!

உடல் எடை குறைக்கிறதுக்கு மூணு மாசம் போதும். எண்ணெய்ப் பலகாரங்கள், அசைவம், இவற்றைத் தவிர்த்து, சைவ உணவுகளைத் தொடர்ந்து மூணு மாசம் எடுத்துக் கொள்ளவேண்டும். சாப்பிட்டபின் இரண்டு மணி நேரம் கழிச்சு 600 மி.லி



# மாத்திரையால் குறையுமா எடை?

தண்ணீர் குடிக்கணும். இது உடம்பில் கொலஸ்ட்ரால் ஏறாமல் பார்த்துக்கும்.

உடல் பருமனைக் குறைக்கணும்னு நினைக்கிறவங்க, ஒரு விஷயத்தைக் கவனத்திலே வெச்சுக்கணும். நாம எந்த அளவுக்கு உடம்பை அழகா வெச்சுக்கணும்னு நினைக்கிறோமோ அதே அளவுக்கு ஆரோக்கியமும் அவசியம்னு உணரணும்.

மாத்திரைகளை நம்பி வாழ்க்கையைத் தொலைக்கிறதைவிட, சில எளிமையான உணவுப் பழக்கவழக்கங்களைக் கடைப்பிடிக்கிறது வாழ்க்கையை மட்டுமல்ல, நம்ம உடம்பையும் அழகா வைக்கும்!'' என்று உறுதியாகச் சொல்கிறார் ஸ்ரீகிருஷ்ணவர்மா.

**- எம்.ஆர். இராஜேந்திரன்**



# கல்கி



2008 நவம்பர் 30
ஸர்வதாரி கார்த்திகை 15
மலர் : 67
இதழ் : 18

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## சட்டக் கல்லூரி விவகாரம் - ஏற்கவியலாத உதாசீனம்!

**உ**ச்சநீதிமன்ற தலைமை நீதிபதி கே.ஜி. பாலகிருஷ்ணன், நாட்டின் நிலைகுறித்து கவலை தெரிவித்துப் பேசியுள்ளார். வோட்டுப் பிடிக்கும் நோக்கில், எதற்கெடுத்தாலும் போராட்டம், கதவடைப்பு என்று பொது மக்களைத் துன்பத்துக்கு உள்ளாக்கும் அரசியல் கட்சிகளின் போக்கைக் கண்டித்துள்ளார். இவை மக்களிடையே பிளவை உருவாக்கும் ஆயுதங்களாக மாறிவிட்டதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

சென்னை சட்டக் கல்லூரி மாணவர்களிடையே நிகழ்ந்த வன்முறை, கைகலப்புக்கும் இந்தப் பிரிவினை அரசியல் போக்கே காரணம். இடஒதுக்கீடு என்கிற சமுதாயச் சீரமைப்புக் கருவியை, ஜாதி அரசியல் என்கிற அபாயகரமான ஆயுதமாக உருமாற்றிய பெருமை நமது அரசியல்வாதிகளையே சேரும்.

பள்ளிப் பருவத்திலேயே, பிற்படுத்தப்பட்ட பிரிவினருக்குக் கூடுதல் கவனமும் பயிற்சியும் தந்து, அவர்களை முன்னேற்ற வேண்டும். அதற்குப் பதிலாக, மேலும் மேலும் ஒதுக்கீடுகளை உயர் கல்வியிலும் வேலை வாய்ப்பிலும் பணி உயர்விலும்கூட வழங்கி, வோட்டுப் பிடிக்கும் குறுக்கு வழியை மேற்கொண்டுள்ளனர் அரசியல்வாதிகள். இதனால், எந்நேரமும் தனது ஜாதி குறித்த சிந்தனையுடனேயே ஒரு மாணவன் வளையவருகிறான். சட்டக் கல்லூரி போன்ற






சுயதொழில் சார்ந்த நிறுவனங்களில் நன்கு பயின்று, மதிப்பெண் பெற்று மாணவர்களால் உயர முடியாத சூழலில், வேலை வாய்ப்பும் கேள்விக் குறியாகிவிடுகிற நிலையில், பெரும்பாலான மாணவர்கள் கல்லூரிப் பருவத்திலேயே அரசியலில் நுழைந்து, தங்கள் 'பிழைப்புக்கு' வழி தேடிக்கொள்ளும் அவலமும் நிலவுகிறது. இதனைச் சாதகமாக்கிக் கொண்டு, அவர்களிடையே ஜாதிப் பிரிவினையை வளரச் செய்து, வேடிக்கை பார்க்கும் கொடுமையில் அரசியல்வாதிகளும் ஈடுபடுகிறார்கள். அரசியல்வாதிகளின் பிடியில் இருப்பதுடன், லஞ்ச - ஊழலும் குறைவற ஊடுருவப் பெற்ற காவல் துறையும் பொறுப்பின்றிச் செயல்படுகிறது. சட்டக் கல்லூரியில் நிகழ்ந்த கொடுமை குறித்து, தமிழக முதல்வர் கண்டனம் தெரிவிக்காததும் காவல் துறையின் அலட்சியத்துக்கு வருத்தம் தெரிவிக்காததும் மாணவர்களுக்கு அறிவுரை கூட வழங்க முற்படாததும் ஏற்கவியலாத உதாசீனம்.

நீதிபதி பாலகிருஷ்ணன் சுட்டிக்காட்டியுள்ளது போல், மாறுபட்ட கலாசாரங்கள் புழங்கும் நமது நாட்டில், வேறுபாடுகள் தவிர்க்க முடியாதவை. அந்த வேறுபாடுகளைக் கடந்து நாம் எவ்வாறு ஒன்றுபடுகிறோம் என்பதில்தான் நம் நாட்டின் எதிர்காலமே இருக்கிறது. இந்தப் பண்பையும் அறிவையும் நமது கல்வி அமைப்புதான் புகட்டவேண்டும்.

இன்னமும் மெக்காலே கல்வித் திட்டத்தின் ஆதிக்கத்தில் இருக்கிற நமது கல்வி முறை, சீரமைக்கப்பட வேண்டும். ஆரம்பக் கல்வியின்போதே மாணவ பணித்திறன்கள் அடையாளம் காணப்பட்டு, அதற்கேற்ப பல்வேறு மாணவர்களுக்கும் வெவ்வேறு உயர்கல்வி வாய்ப்புகள் வழங்கப்பட வேண்டும்.

ஆர்வத்துக்கும் உடல் வலுவுக்கும் வடிகால் தரும் ஆரோக்கியமான சூழல் கல்லூரிகளில் நிலவினால் மட்டுமே, மாணவர்கள் திசைகெட்டுப் போய் வன்முறையில் இறங்காமல் காப்பாற்றப்படுவார்கள்.

○

## முன்னே வரும் மணி ஓசை!




# யாருமே நடிக்காத சினிமா!

**டிசம்பர் சீசன் கூப்பிடு தூரத்தில் இருக்க, சென்னையில் சுறுசுறுப்பாக அதற்குக் கட்டியம் கூறின சில நிகழ்ச்சிகள் :**

**ஸ்ரீ** கிருஷ்ணகான சபாவில் நாட்டிய கலா கான்ஃபரன்ஸை முந்திக்கொண்டு நடைபெறுகிறது, பஜனை கலா கான்ஃபரன்ஸ் (21.11. முதல் 5.12. வரை). ஒவ்வொரு தினமும் பழம்பெரும் பாகவதர் ஒருவரின் நினைவுக்கு அர்ப்பணம். சனி - ஞாயிறுகளில் காலை எட்டு மணி முதல் இரவு பத்து மணி வரை சம்பிரதாய பஜனை நிகழ்ச்சிகள்; மற்ற தினங்களில் மாலை ஐந்து முதல் இரவு ஒன்பதரை வரை. அடேயப்பா! இத்தனை பஜனை குழுவினரா? என்று அவசரமாக ஆச்சர்யப்படாதீர்கள்... அதைக் காட்டிலும் இனிய ஆச்சர்யம்: அனைத்து பாகவதர்களுக்கும் இலவச மருத்துவ முகாம் 30.11 அன்று!

'**க**லௌ ஸங்கீர்த்த கேசவம்' என்று அந்தக் காலத்தில் இறைவன் புகழ் பாடிய இசை மார்க்கம், இன்று சபா கச்சேரி என்கிற மாற்று வடிவத்தில் கமர்ஷியல் ஆகி விட்டது. கலைஞர் - ரசிகர் என்ற உறவைக் காப்பாற்ற, சங்கீதத்தின் ஆதாரப் பண்புகள் காவு கொடுக்கப்படுகின்றன - ஹிந்து நடத்திய செமினாரில் ஆர்.கே. ஸ்ரீராம்குமாரும் நெய்வேலியாரும் சற்றே வருத்தப் பட, ''பக்தியாவது ராமராவது! கீர்த்தனைகளில் தியாகராஜர் விவரிக்கும் அனுபவம் எனக்கெதற்கு? அதிலே மிளிரும் இசை பாவம் போதுமே! சபா சங்கீதம் எவ்வகையில் மட்டமாகும்?'' என்று டி.எம்.கிருஷ்ணா சீறிப்பாய... ஒதுக்கப்பட்ட கேள்வி நேரத்துக்கு டைம் இல்லாமல் போனதால் ஒரு மகா யுத்தம் தவிர்க்கப்பட்டது.

**க**ருத்தில் மோதிக் கொண்ட டி.எம். கே.வும் (பாட்டு) ஆர்.கே.எஸ்ஸும் (வயலின்) கச்சேரியில் சந்தோஷமாக இணைந்ததை ஒரு சினிமா டிரெய்லரில் பார்க்க முடிந்தது! யாருமே நடிக்காத இந்த சினிமாவில் பாம்பே ஜெயஸ்ரீ, டி.எம். கிருஷ்ணா தத்தம் குழுவினருடன் கச்சேரி செய்கிறார்கள். சேர்ந்தும் பாடுகிறார்கள்! விளம்பர உலக வித்தகர் ஜெயேந்திராவின் இயக்கத்தில், ரியல் இமேஜ் தயாரிப்பு. 'மார்கழி ராகம்' டிசம்பர் 18 அன்று ரிலீஸ். டைட்டில் லெட்டரிங்கில் கடைசி எழுத்துக்கு மேல் ஒரு பரங்கிப்பூ! இப்படத்தில் காணக்கூடிய அழகியலுக்கு மலர்ச்சியான உதாரணம். அழகியலும் அதிரும் டால்பி ஒலி அமைப்பும் கர்நாடிக் மியூசிக்குக்குப் புதிய பளபள பாக்கேஜிங்!

**- சாயா**

* நெய்வேலி சந்தானகோபாலன்





சிவ! சிவ!

# ஸ்ரீ அவ்வை ஹோம்

(ஆதரவற்ற அன்னையருக்கு புகலிடம் அளிக்கும் ஓர் அன்பாலயம்)

36, மாணிக்கவாசகர் சாலை, சேக்கிழார் நகர், குன்றத்தூர்
சென்னை-600 069. போன்: 044-3200 4200



## வருடத்தில் ஒரு நாள் உணவு வழங்கி உதவலாம்!




புத்தாண்டு மற்றும் பொங்கல் நல்வாழ்த்துக்கள்! வேதமாதா காயத்ரி தேவியின் பேரருளாலும் மஹா சுவாமிகளின் ஆசியுடனும் சமுதாயத்தினரால் நிராகரிக்கப்பட்ட பெண் முதியோர்களுக்கு அடைக்கலம் அளித்து அவர்களுடைய நலனுக்காகவே அர்ப்பணிக்கப்பட்டுள்ளது ஸ்ரீ அவ்வை ஹோம். ஆதரவின்றித் தவிக்கும் வயதான அன்னையர்களுக்கு உணவு, உடை, இருப்பிடம், மருத்துவ வசதி மற்றும் அனைத்து தேவைகளையும் இலவசமாகப் பூர்த்தி செய்து, தினசரி இறைவழி பாடு, தியானம், கூட்டு பிரார்த்தனையுடன் திருமுறை பாராயணம் செய்து பராமரித்து வருகிறோம். அன்னையர்களின் இந்த கூட்டுப் பிரார்த்தனையால் தங்களின் கோரிக்கைகள் நிறைவேறும். அனைவரும் மகிழ்ச்சியுடன் கொண்டாடும் புத்தாண்டு, பொங்கலை ஆதரவற்ற அன்னையரும் கொண்டாட உங்கள் அன்பளிப்புகளை பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். வயதான அன்னையருக்கு இந்நாட்களில் தாங்கள் செய்யும் சிறு உதவியும் நம்மை பெற்று சீராட்டி வளர்த்த அன்னையரின் உள்ளத்தை குளிரச் செய்வதற்கு இணையாகும்.

ஒரு நாள் காலை உணவுக்கு ரூ.400/- அனுப்பும் அன்பர்களுக்கு துளசி மாலை அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் மதிய உணவுக்கு ரூ.450/- அனுப்பும் அன்பர்களுக்கு ருத்ராட்ச மாலை அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் இரவு உணவுக்கு ரூ.350/- அனுப்பும் அன்பர்களுக்கு நவரத்தின மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் உணவுக்கு ரூ.1100/- அனுப்பும் அன்பர்களுக்கு ஸ்படிக மாலை அனுப்பி வைக்கப்படும்

10 நாட்கள் உணவுக்கு ரூ.11,000/- அனுப்பும் அன்பர்களுக்கு பவள மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

அன்னையர் ஒருவருக்கு ஒரு வருட மருத்துவச் செலவு ரூ.1300/- அனுப்பும் அன்பர்களுக்கு சந்தன மாலை அனுப்பி வைக்கப்படும்

காப்பகத்தின் ஒரு மாத பராமரிப்பு செலவுக்கு ரூ.4,000/- அனுப்பும் அன்பர்களுக்கு முத்துமணி மாலை அனுப்பி வைக்கப்படும்

தங்களின் திருமண நாள், பிறந்த நாள், தொழில் தொடங்கிய நாட்கள், முன்னோர்களின் நினைவு நாட்கள், பண்டிகை நாட்கள், அமாவாசை மற்றும் பௌர்ணமி, கிருத்திகையில் வயதான அன்னையர்களுக்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எதுவாயினும் அன்புடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று ஸ்ரீஅவ்வை ஹோமில் அஷ்ட ஐஸ்வர்யங்களை அள்ளித்தரும் காயத்ரி ஹோமம் நடைபெறுகிறது. இதில் பங்கு பெற சங்கல்ப கட்டணம் ரூ.300/-



காயத்ரி என்பதன் பொருள் தன்னை துதிப்பவரை, ஜபிப்பவரை காப்பாற்றுவது என்பது பொருள். காயத்ரி வழிபாடு நமக்கு நீண்ட ஆயுள், புகழ், செல்வம் மற்றும் புத்திர பாக்கியத்தை அளிக்கிறது. காயத்ரி மூல மந்திரம் பாவங்களை அழித்து, புண்ணியத்தை வளர்ப்பதற்கு தோன்றிய மந்திரமாகும். நோய் நொடிகளை தவிடுபொடியாக்கும் சக்தி இதற்கு உண்டு குடும்ப பிரச்னைகள், தோஷங்கள், வியாபார தடைகளை போக்கும் சக்தியும் இதற்கு உண்டு. இந்த காயத்ரி ஹோமத்தில் பங்கு பெற சங்கல்ப கட்டணமாக ரூ.300/- அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய பிரார்த்தனைகளையும், கோத்ரம், ராசி, நட்சத்திரத்தையும் தெளிவாக எழுதி அனுப்பினால், தங்களுடைய பிரார்த்தனைகளுக்கு ஏற்ப தனித் தனியாக சங்கல்பம் செய்து, ஹோம பிரசாதத்துடன் ஸ்ரீகாயத்ரி யந்திரம், ஸ்ரீ காயத்ரி மகா மந்திரம், மகா மிருத்யுஞ்சை மந்திரம் மற்றும் ஜெப மாலா அடங்கிய சிடியும், காயத்ரி வண்ணப்படமும், காயத்ரி தேவி ரக்ஷை மற்றும் ஹோம பஸ்பமும் அனுப்பி வைக்கப்படும். காயத்ரிதேவியின் மகா மந்திரம் அனைத்து இல்லங்களிலும் ஒலித்து ஐஸ்வர்யம் பெற வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். வயதான அன்னையரை பாதுகாக்கவும் ஸ்ரீகாயத்ரி ஹோமத்தில் பங்கு பெறவும் தங்கள் நன்கொடையை மேற்கண்ட முகவரிக்கு **Cheque/DD/MO** மூலமாக **SRI AVVAI HOME, CHENNAI** என்ற பெயருக்கு அனுப்பி காயத்ரி தேவியின் திருவருளால் பூரண ஆயுளும் ஆரோக்கியமும் பெற்று, துன்பங்கள் நீங்கி, புகழ் மிகுந்த வாழ்க்கை பெற அன்புடன் வேண்டுகிறோம்.

**புத்தாண்டில் அனாதைகளற்ற புதிய சமுதாயம் அமைய பிரார்த்திப்போம்!**

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு**

# புதிய வானம்

''**பொ**ன்னி வர்றா பாரு... ஓடிப் போய் ஒரு கட்டு மொளக்கிரை வாங்கிட்டு வா ராஜு!'' - தெருவின் மறு முனையிலிருந்தே பலமாக, ''கீரேய்! வாழைக்காய், வாழத்தண்டு, வெந்தயக் கீரை, பொன்னாங்கண்ணி, பசலைக் கீரேய்!'' என்ற வலுவான குரல் ஒலித்ததுமே, அம்மா அவனை அழைத்து விட்டாள். கண்ணாடி முன் நின்றபடி, 'தலையைக் கொஞ்சம் வித்தியாசமாகச் சீவலாமா?' என்று பலமாக யோசித்துக் கொண்டிருந்தவன் அதைக் கைவிட்டான். 'திடீர்னு என்ன ஹேராம் கமல் ஹேர் ஸ்டைல்?' என்று கீதா கேட்டால் திணற வேண்டியிருக்கும்!

அம்மா கொடுத்த காசை வாங்கிக் கொண்டு கீழே விரைந்தான். பொன்னியிடம் பேரம் பேசுவது, அம்மா சமைக்கும் கீரை கண்டலைக் காட்டிலும் ருசிகரமான அனுபவம்.

அவன் எதிர்பார்த்தது போலவே, பொன்னி கூண்டு வண்டியில் தளதளத்த கீரைகளுடன் அண்டை வீடுகளுக்கிடையே வட்டமடித்துக்கொண்டிருந்தாள். ஏதோ ஒரு லயத்தில் அவன் அம்மா கீரை சமைப்பது, பொன்னியின் உள்ளுணர்வில் பதிந்திருக்க வேண்டும்! அவன் வாங்க இறங்கும் தினங்களில் வாசலைத் தாண்டி அவள் போனதே இல்லை!

''என்ன விலை?'' என்றான் ராஜு, குரலை முடிந்த மட்டும் அதட்டலாக்கி.

''பன்னிரண்டு ரூபா சாமி'' என்று ஒரு முளைக்கீரைக் கட்டை உலுக்கி, பூச்செண்டு போல் அவனிடம் நீட்டினாள் பொன்னி.

''மொளக்கீரைதான் வாங்கப் போறேன்னு யாரு சொன்னா?''

''வேணாம் கண்ணு, தேவையானதைப் பாத்து நீயே எடுத்துக்கோ...'' என்று எடுத்த கட்டைத் திருப்பி வைத்தாள்.

அவள் வண்டியிலிருந்த சரக்கை சில நிமிடங்களுக்குப் பிராய்ந்தவன், அவள் திரும்ப வைத்த கட்டையே கையில் எடுத்து, ''விலை சொல்லு'' என்றான்.



''அதான் சொன்னனே சாமி பன்னண்டு ரூவா!''

''எட்டு ரூவா தருவேன்'' என்று குரலை அவன் மீண்டும் கடுமையாக்கிக்கொண்டபோது, கீதாவின் ஸ்கூட்டி சீறி வந்து நின்றது.

''கட்டாது சாமி...''

''அப்படின்னா வேண்டாம்...''

''அப்படிச் சொல்லாதே கண்ணு... உங்கிட்டே கொள்ளையடிச்சா நான் மெத்த வூடு கட்டப் போறேன்... ஒரு ரூபா வேணா குறைச்சுகினு குடு...''

''என்ன பேரமா?'' கீதா அவனருகே வந்து கேட்டாள்.

''எட்டு ரூபா கீரையைப் பன்னண்டு ரூபா சொல்றா... நாம என்ன ஏமாளிங்களா?'' பக்கபலம் சேர்ந்த ஜோரில்



ராஜு" தொடர்வதை இடைமறித்து, அவன் கையிலிருந்து எட்டு ரூபாய் சில்லறையை வாங்கினாள். தன் ஹேண்ட் பாக்கில் சில்லறை தேடி நான்கு ரூபாய் சேர்த்து பொன்னியிடம் தந்து, ''இந்தாம்மா கட்டை அவர்கிட்டே கொடு.''

''ராசாத்தி!'' என்று கீரையோடு கீதாவுக்கும் சேர்த்து காசை மூன்று சுற்று சுற்றி விரல்களை முறித்து, திருஷ்டி கழித்தாள் பொன்னி.

''அவகிட்டே போய் இரண்டு ரூபாய்க்குப் பேரம் பேசறியே, என்ன மனுஷன் நீ!'' - சுள்ளென்று அவள் கோபப்படுவாள் என அவன் எதிர்பார்க்கவில்லை.

''காலங்கார்த்தால ஒரு ஏழைப் பொண்ணு, கோயம்பேடுக்கோ தண்ணித்துறை மார்க்கெட்டுக்கோ போய் கீரை புடிச்சுக்கிட்டு வருது. உடம்பு நோக வண்டி மிதிக்குது. அரை வயித்துக்கோ கால் வயித்துக்கோ சாப்பிட்டிருக்குமா அது? ஒரு பொருளை வீட்டு வாசல் வரைக்கும் கொண்டு வந்து உன் கைக்குச் சேர்க்குதே அது கேக்கற விலையைக் கொடுத்தா குறைஞ்சுருவியா...? இல்லே ஏழையாயிடுவியா?''

அவன் கண்கள் கோபத்தில் விரிந்து

# சர்ப்ரைஸ் மினி தொடர் 3

## சீதா ரவி

பளபளப்பதைப் பார்க்க, அவனுக்குக் கொஞ்சம் அச்சமாகவும் நிறைய வியப்பாகவும் இருந்தது.

''பேரம் பேசலைன்னா, அநியாயமா லாபம் வைச்சு நம்மை ஏமாத்துவாங்க இவங்க...'' - பலவீனமாக முணுமுணுத்தான்.

''ஒருநாள் - ஒரே ஒரு நாள் - அவ செய்யற வேலையைச் செஞ்சு பாரு! அப்புறம் பேசு! தெருமுனை வரைக்கும்கூட உன்னால் ட்ரைசைக்கிளை மிதிக்க முடியாது, தெரியுமா?''

''ஓ.கே! ஓ.கே...! கூல் டவுன் மிஸ் ஃபயர் பிராண்ட். இந்தா உன் நாலு ரூபா...'' என்று அவன் கொடுத்த காசை வாங்க மறுத்தாள். ''போகலாமா?'' என்றாள் இயல்புக்குத் திரும்பி.

''கீரையைக் குடுத்துட்டு அம்மாகிட்டே சொல்லிட்டு வந்துடறேன். உன் வண்டியை கேட்டுக்குள்ளே விடு...''

''வண்டியிலயே போகலாமே...''

''வேண்டாம். நிறைய பஸ் இருக்கு. இங்கேருந்து இரண்டே ஸ்டாப்தான். அஞ்சு நிமிஷத்துல போய்டலாம்.''

**அ**வன் எதிர்பார்த்த மாதிரியே அம்மா கேட்டாள். ''பஸ்லதானே போறீங்க?''

''கீதாவோட ஸ்கூட்டர் நம்ம போர்டிகோலதான் இருக்கு. ஒரு கண் பார்த்துக்கோ'' என்றதும், அவன் முகத்தில் பரவிய நிம்மதியைக் கவனிக்காததுபோல் விடைபெற்றுக் கொண்டான்.

''ஏன்? என் பின்னாடி ஸ்கூட்டர்ல உட்கார்ந்துக்கிட்டு வந்தா உங்களுக்கு கௌரவக் குறைச்சலோ...?'' கீழே வந்ததுமே கீதா பாய்ந்தபோது, அவனுக்குத் தலையைப் பிய்த்துக்கொள்ள வேண்டும் போலிருந்தது.

அப்படியொரு அண்மைக்குத் தன் மனம் எவ்விதத்திலும் தயாராயில்லை என்பதை, அவன் இன்னும் யார் யாருக்கெல்லாம் பகிரங்கமாகவும் சூட்சமமாகவும் உணர்த்த வேண்டும்? அம்மா, அப்பா? கான்ஸ்டபிள் மருதமுத்து...? சிநேகிதியா? சகோதரியா? சக மாணவியா அல்லது வியப்புக்குரிய ஆதர்சமா? என்று புரியாத ஒரு பாவத்தில் பழகிக்கொண்டிருக்கும் இந்தப் பெண்... இவன் யார்? தனக்கு என்ன உறவு? கீரைக்காரப் பொன்னி மட்டுமே எவ்விதக் கேள்வியுமின்றி கீதாவை அங்கீகரித்திருக்கிறாள் என்று உணர்ந்து வியந்தான்.

''என்ன பதிலே காணும்?''

''போகலாம், வா!''

**தெ**ருவைக் கடப்பதற்குள் தன்னுடைய பிரத்யேக வானத்தின் அழகு மூலைகளை அவனுக்குக் காட்டித் தந்துவிட்டான். தூங்குமூஞ்சி மரப் பொந்தின் நுழைவாயிலில் அமர்ந்து பகலைக் கோபமாக முறைத்த குண்டு ஆந்தை. அதன் பின்னாலிருந்து எட்டிப் பார்த்து 'இட்டாச்சி' என்று விளையாடிய இரண்டு குஞ்சுகள். தெருமுனையில் இருந்த எலிசா வீட்டு விருட்சிப் பூச்செடி இலைகளை இணைத்து உருவாக்கியிருந்த தையல் குருவியின் கையகல வீடு. அந்த இலைகளின் ஓரத்தில் ஓடிய அதிசயத் தையல், கிண்ணம் போன்ற அமைப்பிலான கூட்டுக்குள் பரப்பிய மெத்தென்ற சருகு - பஞ்சு பூச்சு!

''அதோ பாரு'' என்று அவன் சுட்டிய முல்லைப் பந்தலில் பழுப்பு மஞ்சள் நிறத்தில் ஒரு சின்னஞ் சிறு குருவி தத்தித் தாவியது. உடலினின்றும் உயர்ந்து நீண்ட வாலை மேலும் நீட்டிக்கொண்டு நெஞ்சை நிமிர்த்திப் பாடியது.

கூட்டருகேயிருந்து கீதாவை மெள்ள அகற்றி அப்புறப்படுத்தியவன் ''பயந்துடும்!'' என்றான் குரலைத் தாழ்த்தி.

''இத்தனூண்டு இருந்துக்கிட்டு எத்

தனை அழகாப் பாடுது ராஜு!''

''வா போகலாம்'' என்று அவள் கையைப் பற்றி அழைத்தபோது, தன் அசௌகரியங்கள் கரைந்து போய்விட்டிருப்பதை உணர்ந்தான்.

''ஒரு தெருவுக்குள்ளே இத்தனை உயிரோட்டமா ஒரு பறவை உலகமா?'' என்று வியந்தாள், பஸ் ஸ்டாண்டில் நின்றபோது.

''அதுக்காகவே இந்த ஏரியாவுல வீடு பார்க்கச் சொன்னேன் அப்பாவை. வாடகை அதிகம் தான். ஆனாலும் எனக்காக அவரும் ஒத்துக்கிட்டாரு...''

''இங்கயே இவ்வளவு இருக்குன்னா இன்னும் சோலைக்குள்ளே என்னவெல்லாம் இருக்கும்...?''

''காட்டத்தானே போறேன்... இப்போ பஸ் வருது ஏறு.''

''உனக்கெப்படி இதுலல்லாம் ஆர்வம் வந்தது? உங்க அப்பாவுக்கும் இது ஹாபியா...?''

''இல்லை... ஆனா இதை என் 'ஹாபி'ன்னு சொல்றதை நீ முதல்ல நிறுத்தணும். போலீஸ்காரருக்குப் புரியணுமேன்னுதான் நான் அந்த வார்த்தையைப் பயன்படுத்தினேன். பறவைகள் என்னோட 'பாஷன்' - ஹாபின்னு சொன்னா ஏதோ வெறும் பொழுதுபோக்குன்ற மாதிரி தொனி வருது... அப்படியில்ல என்னோட ஆர்வம். ஐ ஜஸ்ட் லவ் பர்ட்ஸ்...''

காலியாக இருந்த பெண்கள் இருக்கை ஒன்றில் அவள் அமர்ந்திருக்க, அருகே நின்றபடி தன் ஆர்வத்தின் வரலாற்றைச் சொன்னான். பேரளத்தில் தாத்தா வீட்டில் தங்கிப் பள்ளியில் படித்த காலத்தில், ஃபேனில் அடிபட்டு விழுந்த சிட்டுக்குருவி, அதைக் காப்பாற்றியவனுக்கு தாத்தா, ஸலீம் அலி பற்றிச் சொன்





விருட்சிப் பூச்செடி
இலைகளை
இணைத்து ,
தையல் குருவி
உருவாக்கியிருந்தது
தன் கையகல வீட்டை...
கூட்டுக்குள் மெத்தென்ற
பஞ்சு பூச்சு!

ளது, அந்தப் பறவை மனிதர் எழுதிய புத்தகத்தை நூலகத்தில் பார்த்து, அதன் வண்ணப்படங்களிடையே, வயல் வெளிகளில் மேய்ந்த தவிட்டுக் குருவியையும் அரச மரத்தில் ஊஞ்சல் வீடு கட்டிய தூக்கணாங்குருவியையும் அடையாளம் கண்டு மகிழ்ந்தது, ஏழு வருஷம் காசு சேர்த்து பைனாகுலர் வாங்கியது...

பஸ்ஸை விட்டு இறங்கி நியா ஸஃபிகல் ஸொஸைடி வளாகத்துக்குள் நடக்கையில், உதட்டின் மேல் விரல் வைத்து மௌனம் காக்கச் சொன்னான். செல்ஃபோனை அணைக்கச் செய்தான். கான்கிரீட் சாலையின் இருபுறமும் மரங்




கள், விதவிதமான பசுமையில் வெவ்வேறு உயரங்களில், வடிவங்களில் தழைத்து நிற்க, இளங்காலை சூரியன் கிழக்கை ஒளிமயமாக்கினான். தூரத்தில் இலேசாக அலைகளின் ஓசை எழுவதும் விழுவதுமாகக் கேட்டது. காற்றில் இயற்கையின் ஈர மணம். வெள்ளியை உருக்கியது போல் பாடிய ஒரு கறுப்பு வெள்ளைக் குருவியைச் சுட்டிக்காட்டி 'மாக்பை ராபின்' என்றான். 'கர்ர்'ரென்று எழுந்த முரட்டுக் குரலைப் பின்தொடர்ந்து, மஞ்சளும் கறுப்புமாக மின்னிய மாம்பழக் குருவியைக் காட்டித் தந்தான். தென்னை மரம் கூரை வேய்ந்த ஒரு நிழல் பரப்பில், ரிப்பன் போன்ற வெள்ளை வாலைச் சுழற்றிப் பறந்த ஒரு குருவியைக் காட்டி, ''பாரடைஸ் ஃபிளை காட்சர்'' என்றான் மெல்லிய குரலில்.

மந்திரக் கோலை வீசும் வன தேவதையாக அந்தப் பறவை அந்தரத்தில் மிதந்து மறைவதை, வியப்பும் களிப்பும் மேலிடப் பார்த்தாள் கீதா. தன் நெஞ்சை அள்ளிச் சென்று அனாயாசமாக அது மறைந்ததை எண்ணிப் புன்னகை செய்தாள்.

''என்ன சிரிக்கறே?''

''அழகாயிருக்கு...''

''வா, ஆத்தங்கரையோரம் போகலாம்...''

இடதுபுறம் பிரிந்த பாதையில் நடந்து போய் அடையாறு முகத்துவாரக் கரையை அடைந்தனர். நதி சோம்பலைத் தேக்கி கடலை நோக்கி நகர்ந்தது.

தன் கழுத்தில் தொங்கிய பைனாகுலரைக் கழற்றி கீதாவிடம் தந்தான். ''இது வழியா பாரு...''

''இங்கதான் அன்னிக்குக் கொலையைப் பார்த்தியா...?''

''இப்போ ஏன் அதை ஞாபகப்படுத்தறே...? இங்க இல்லை அது. பாலத்துக்கு மேற்கால, குப்பத்துப் பக்கமா கரையில இறங்கி நடந்தப்போ... விடு... அங்க பாரு...'' என்று தண்ணீரில் வெண் புள்ளிக் கோலமிட்ட நாரைகளைச் சுட்டினான்.

கீதா பைனாகுலர் வழியே பார்த்த கணத்தில், அவர்களுக்குப் பின்னாலிருந்த மரங்களிடையே ஒரு சலசலப்பு.

திரும்பிப் பார்த்த ராஜு, அடுத்த கணம் கீதாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தான்.

(தொடரும்)

அப்பாவை ஆராதிக்கும் பிள்ளையின் கதை. அப்பா - மகனாக முறையே ஏற்றத்தோடும் சீற்றத்தோடும் வசீகரிக்கிறார் சூர்யா. அதுவும் ஷமீரா ரெட்டி - சூர்யாவின் காதல் காட்சிகள் டீன் ஏஜ் கவிதை. ஷமீராவைப் பார்க்கும்போதெல்லாம் கிடாரில் ட்யூன் போடும் சூர்யா, தன் காதலை அவர் ஒப்புக்கொண்டதும், 'இளையராஜா சாங் போல இருக்குப்பா எங்க காதல்' என்று உருகுவது அவர் நடிப்பின் இனிமையான பக்கங்கள்.

ஹீரோயின் ஷமீரா ரெட்டி, தமிழ் ஹீரோயின்களில் ஹெல்த்தியான வரவு. அவர் ஒவ்வொருமுறை சிரிக்கும்போதும் பூ உதிர்வது போன்ற அதிர்வுகள் மனசுக்குள் ரீங்கரிக்கின்றன. ஆனாலும், 'நடிப்பு' ரொம்ப முக்கியம் என்பதை யாராவது அவரிடம் சொல்லியே ஆகவேண்டும். எப்போதும் போல கலக்குகிறார் சிம்ரன். அதுவும் அம்மா வேடத்தில் அவரின் நடிப்பில் அடர்த்தி கூடுதல். இனி வெரைட்டியான ரோல்கள் அவரை நோக்கிப் படையெடுக்கலாம். அப்பா சூர்யா, மனத்தில் ஒட்ட மறுக்கிறார். அவர் புற்றுநோயால் அவதிப்படுகையில் கதை படுத்துவிடுகிறது! சூர்யாவின் மனைவியாக வரும் திவ்யா நடிப்பில் தேஜஸ். பொறுப்பும் திகைப்புமாக அவர் நிகழ்த்தும் மேனரிசங்களில் மனசில் நிற்கிறார். சிம்ரன் - அப்பா சூர்யாவின் காதல் காட்சிகள் ப்ளாக் அண்ட் வொய்ட் கவிதை.

படத்தின் முக்கியமான தூண் இசையமைப்பாளர் ஹாரிஸ் ஜெயராஜ். பின்னணி இசையிலும், பாடல்களிலும் இசை உற்சவம்! கௌதம் - ஹாரிஸ் கூட்டணியில் மட்டும் பாடலாசிரியர் தாமரை தனித்துத் தெரிவது என்ன மாயமோ தெரியவில்லை. ரத்னவேலுவின் ஒளிப்பதிவில் அமெரிக்கா கொள்ளை அழகு. வசனங்களில் அநியாயத்துக்கு ஆங்கிலம்; திரைக் கதையில் தேவைக்கு அதிகமான தொய்வு போன்ற இன்னும் பிற குறைகள் இருப்பினும், ஒவ்வொரு படத்துக்கும் இயக்குநர் கௌதம் வாசுதேவ் மேனன் வைக்கும் நல்ல கவிதைத் தலைப்புக்காகவும், இந்தப் படத்தில் ஆபாசம் திணிக்காத நேர்மைக்காகவும் ஃப்ரண்ட்லி சல்யூட்!

வாரணம் ஆயிரம் - வலிமையான உணர்வு கவிதை.

- மகிமைராஜன்



தேவாரம், திருவாசகம், திருமந்திரம், பெரியபுராணம்

முதலான நூல்கள் அடங்கிய

# பன்னிரு திருமுறைகள்

- மூலமும் உரையும் -



# பன்னிரு திருமுறைகள்

12000 பக்கங்களுக்குமேல்
24 தொகுதிகளில்

சங்க காலத்தில் பண்டைத் தமிழரின் வீரம், காதல், மன்னரின் வெற்றிச் சிறப்பு, கொடைத் தன்மை, மான வாழ்க்கை, செங்கோன்மை, அறம், பொருள், இன்பம் ஆகியவற்றைத் தேனினும் இனிய செஞ்சொற்களால் பெரும் புலவர்கள் பாடியிருக்கின்றனர். ஆயினும் ஆன்மாவைப் பற்றியோ, அது வீடு பேறு அடையும் வழி பற்றியோ சங்கப்பாடல் எதுவும் வாய்திறக்கவே இல்லை. இம்மையினும் சிறந்த ஒன்று உண்டு என்று கூறிப் பக்தி மார்க்கத்தைப் புகுத்தி முக்திக்கு வித்திட்டவர் சமயச் சான்றோராவார். தனி மனிதனைப் பாடும் சங்க இலக்கியப் போக்கு மாறி பக்தி மார்க்கம் தழைக்கலாயிற்று. தமிழிலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியங்கள் தோன்றலாயின. இந்த வரிசையில் **பன்னிரு திருமுறைகள்** முதலிடம் பெறுகின்றன. இவற்றை, அருட்செல்வர் அய்யா டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின் ஆதரவுடன் வெளியிட்டு, பல்லாயிரக்கணக்கில் விற்பனையான இத்தொகுப்பினை, பலரின் வேண்டுகோளுக்கிணங்க மீண்டும் வெளியிடுகிறோம்.

விலை
ரூ.4000
சலுகை
விலையில்
ரூ.1850
மட்டுமே!

**மெய்கண்ட சாத்திரம்**
ஒரே தொகுதியில்
(மூலமும் உரையும்)
எனும் நூல் இலவசம்.

சலுகை மேல்
சலுகையாக
தபால் செலவு
முற்றிலும்
**இலவசம்!**

## மெய்கண்ட சாத்திரம்

சிவஞானபோதம், திருவருட்பயன்,
சிவப்பிரகாசம் முதலான பதினான்கு
நூல்கள் அடங்கியுள்ள
மெய்கண்ட சாத்திரம்
எனும் இந்நூலில்.

**மகாசிவராத்திரி (23.2.2009) சிறப்பு வெளியீடு!**

பதிவு செய்யக்கடைசி நாள்
**29.11.2008**

பன்னிரு திருமுறை ஆசிரியர் எண்ணிக்கை - 27
பன்னிரு திருமுறையில் அடங்கிய நூல்கள் - 76
பன்னிரு திருமுறையில் மொத்தப் பாடல்கள் - 18326

சைவத்தின் கொள்கைகளை
அனைவரும் படித்துப் புரிந்து
கொள்ளும் வகையில்,
பாடல்களோடு எளிமையான
உரையுடன் வெளியிடுகின்றோம்.

முன்பதிவு செய்வோர் அனைவருக்கும்
2009 பிப்ரவரி மாத மூன்றாம் வாரத்தில் நூல்கள்
(25 தொகுதிகள்) கிடைக்குமாறு அனுப்பப்படும்.
தபால்காரர் பார்சலை தரும்போது
ரூ. 1850 மட்டும் செலுத்தினால் போதும்.

*முன்பதிவிற்கு முகவரி மட்டும் போதும்! முன்பணம் அவசியமில்லை!*

பதிவு செய்ய தொடர்பு கொள்க :

2814 0347 / 2434 5581 / 4350 2995 / 2434 5582 / 93806 30191 / 93806 30192

**வர்த்தமானன் பதிப்பகம்**

21, இராமகிருஷ்ணா தெரு, தியாகராய நகர், சென்னை - 17.
(வடக்கு உஸ்மான் சாலை விவேக்ஸ் அருகில்; Kences Towers பக்கத்தில்)

**29.11.2008க்குள் பதிவு செய்வோர்க்கு மட்டுமே இந்நூல்கள் கிடைக்கும்!**

ஒரே தலைப்பில் இவ்வளவு பெரிய நூலினை இதுவரை எவரும் வெளியிட்டதில்லை !
அதுவும் இவ்வளவு குறைவான விலையில்! வாய்ப்பினை பயன்படுத்துவீர்!!

முப்பது, முப்பத்தைந்து வருடங்கள் ஒரு துறையில் கடுமையாக வேலை செய்து விட்டு, ஐம்பத்தெட்டு வயதாகும்போது 'ஓய்வு பெற்று வீட்டில் அமர்ந்தால் நன்றாக இருக்குமே' என்பது பலருக்கு இயல்பாகத் தோன்றக்கூடிய ஒன்று. அப்படித்தான் அந்த டாக்டரும் கடுமையாக ராணுவப் பணியில் உழைத்தார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக முடக்கு வாதத்தால் விரல்கள் பாதிக்கப் பட்டன. 'நம்மால் இனி அறுவைச் சிகிச்சை செய்ய முடியுமா?' என்று அந்த டாக்டர் கலங்கவில்லை. தக்க சிகிச்சை மேற்கொண்டாலும், தனது மனஉறுதி ஒன்றையே மாபெரும் மருந்தாக நம்பி, நலம் பெற்று மறுபடியும் அறுவைச் சிகிச்சை செய்யத் துவங்கினார். அதன் பிறகு மதுரை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் சிறப்பான கண் மருத்துவராகப் பணியாற்றி விட்டு, ஓய்வு பெற்றார். பிறகும் சும்மா இருக்கவில்லை. கோவல் அறக்கட்டளை என்ற ஒன்றைத் துவக்கினார். அந்த அறக் கட்டளை 1976ல் உருவாக்கிய நிறுவனம் தான் மதுரை அரவிந்த் கண் மருத்துவ மனை. இன்று தேனி, கோயம்புத்தூர், திருநெல்வேலி, புதுச்சேரி என்று பல இடங்



* வெங்கடசாமி

களில் கிளைகளைப் பரப்பி, லட்சக்கணக் கானவர்களுக்குப் பார்வை பெற்றுத் தரும் உன்னதமான பணியில் ஈடுபட்டிருக்கிறது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் 'எங்கள் ஊரில் உங்கள் மருத்துவமனையைத் துவக்குங்கள்' என்று கோரிக்கைகள் வந்த வண்ணம் உள்ளன. அரவிந்த் செய்யும் அற்புதமான சேவைகளின் உந்து சக்திதான் டாக்டர் வெங்கடசாமி. அரவிந்த் மருத்துவமனை மூலம் சுமார் மூன்று லட்சம் கண் அறுவை சிகிச்சைகள் செய்யப்பட்டிருக்கின்றன.

ஆயிரத்தில் ஒருவனாக உருவாகி விட்ட டாக்டர் வெங்கடசாமியின் சாதனையைச் சொல்லக் காரணம், இன்று அரவிந்த் போன்ற சங்கிலித் தொடர் மருத்துவமனைகள் பல, நாடெங்கிலும் உள்ளன. 'அந்தச் சங்கலித் தொடர் மருத்துவமனைகள் மூலம் பணக்காரர்களே உயர் சிகிச்சை பெறுகிறார்கள்' என்ற குரலும் கேட்கிறது. அரவிந்த் போன்ற சேவை மனப்பான்மையுடன் குறைந்த கட்டணத்தில் மருத்துவச் சிகிச்சை அளிக்கும் சங்கிலித் தொடர் மருத்துவமனைகளும் நமது நாட்டில் உண்டு. இன்னமும் பல கார்ப்பரேட் மருத்துவமனைகள் உருவாகி வருகின்றன. இப்படி மருத்துவத் துறை வளர்ச்சி பெற்று வருவதற்குக் காரணம், ஆரோக்கியம் பற்றிய மக்களின் விழிப்புணர்வுதான். டயாபடிஸ், ரத்த அழுத்தம் போன்றவற்றால் பாதிக்கப்படுவோரின் எண்ணிக்கை, விலைவாசி போல ஏறிக் கொண்டிருக்கிறது. அடுத்த பத்






2016ம் வருடம் சுமார் 30 லட்சம் வரை பணியாளர்கள் இந்தத் துறையில் தேவைப்படுவார்கள்.

தாண்டுகளில், மூன்றில் ஒருவருக்குச் சர்க்கரை நோய் இருக்கும் என்று சொல்கிறார்கள். எனவே நூற்றியிருபது கோடி மக்கள் தொகை கொண்ட நமது நாட்டில், மருத்துவமனைகளின் தேவை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இந்தத் துறை வேலை வாய்ப்புக்களை, சந்தர்ப்பங்களை உருவாக்கும் பிரகாசமான துறையாக இருக்கிறது. டாக்டர்கள், செவிலியர்கள், லேப் டெக்னீஷியன், உதவியாளர்கள் என்ற தேவைகளைத் தவிர, மருத்துவ சாதனங்கள் உற்பத்தி, மருத்துவத் தகவல் தொழில்நுட்பம், டெலி மெடிசின் என்று வேறு பல பிரிவுகளும் காலத்துக்கேற்றபடி உருவாகி விட்டன. அதிலும் குறிப்பாக, நமது நாட்டில் கிடைக்கும் சிறப்பான மருத்துவச் சிகிச்சையைப் பெற பல நாடுகளில் இருந்து நோயாளிகள் வருகிறார்கள். மருத்துவச் சுற்றுலா என்றழைக்கப்படும் இந்த வகையில், கடந்த வருடம் ஒரு லட்சம் பேர் வந்திருக்கிறார்கள். வரும் ஆண்டில் இந்த எண்ணிக்கை மேலும் மேலும் உயரும். இதன்மூலம் நமக்கு அந்நியச் செலாவணி கிடைப்பது மட்டுமல்லாமல், ஹோட்டல் தொழிலும் வளர்கிறது. 2016ம் வருடம் சுமார் 30 லட்சம் வரை பணியாளர்கள் இந்தத் துறையில் தேவைப்படுவார்கள். நமது இளைஞர்களும், பெண்களும், இந்தத் துறையைக் கணக்கிலெடுத்து, தங்கள் வசதிக்கேற்ப 'என்ன படிப்பது' என்று தீர்மானித்துக் கொண்டால், அவர்கள் எதிர்காலம் ஒளிமயமாக இருக்கும். வெளிநாட்டைச் சேர்ந்த 20 நிறுவனங்கள் நமது நாட்டின் தொழில் முனைவோரோடு இணைந்து மருத்துவமனைகள் துவங்க இருக்கின்றன.





# வேலையின்மைக்கு மருந்து!

மருந்து தயாரிக்கும் துறையிலும் வெளிநாட்டு முதலீடுகள் நிறையவே எதிர்பார்க்கப்படுகின்றன. உலக அளவில் பார்த்தால் இந்திய மருந்து உற்

'மா:பா' பாண்டியராஜன்

பத்திரிகைத் துறை நான்காவது இடத்தை வகிக்கிறது. வருடத்துக்கு சுமார் பத்து சதவிகித வளர்ச்சி பெறுகிறது. நமது நாட்டில் ஏற்கனவே ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்ட 325 நிறுவனங்கள் இருக்கின்றன. 2010ல் இது இரட்டிப்பாகும். வரும் ஆண்டில் சுமார் மூன்று லட்சம் வேலை வாய்ப்புகள் நமது இளைஞர்களுக்கு இந்தத் துறையில் காத்துக் கொண்டிருக்கின்றன.

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**



# பாண்டி's BLOG

**எ**திர்கால வேலைவாய்ப்புகள் குறித்த கணிப்பையும் ஆய்வையும் ஆண்டுதோறும் வெளியிடுவதை மாஃபா நிறுவனம் வழக்கமாக வைத்துக் கொண்டிருக்கிறது. இந்த வேலை வாய்ப்பு சர்வே ஆயிரத்துக்கும் மேற்பட்ட களப்பணியாளர்களால் நடத்தப்பட்டு, விவரங்கள் நன்கு அலசப்பட்டு, துறை வாயிலாக துல்லியமாகக் கணிப்புகள் வெளியிடப்படுகின்றன. மத்திய அரசின் திட்டக் கமிஷன், தொழிலாளர் நலத் துறை போன்றவை, நாங்கள் தரும் ஆய்வறிக்கையை அடிப்படையாக வைத்துக் கொள்கின்றன. அதன்படி இந்த வருடம் நாங்கள் தயாரித்த இந்த அறிக்கை பலராலும் ஆவலோடு எதிர்பார்க்கப்பட்டது. காரணம் அமெரிக்கா உட்பட, சர்வதேச அளவில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடி இந்தியாவில் எந்தத் துறைகளில் எவ்வளவு வேலைவாய்ப்புகளைப் பாதிக்கும் என்று தெரிந்துகொள்ள பல்வேறு துறையினர் ஆர்வம் காட்டியது தான்.

பெரும்பாலோர் பயப்பட்டதுபோல, தகவல் தொழில்நுட்பம் மற்றும் அதைச் சார்ந்த துறைகள் பாதிக்கப்பட்டுள்ளன. ஒரு லட்சம் வேலை வாய்ப்பு 2009ல் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பு இருந் தது. இப்போது அது பாதியாகக் குறை யும் என்பது கவலை தரும் செய்திதான். அதேபோல நிதி மற்றும் வங்கித் துறையும் சரிவைச் சந்திக்கும். சமீப காலங்களில், ஆட்டோமொபைல் தொழில் நன்றாக பிக்-அப் ஆனது. ஆனால் வரும் ஆண்டில் அந்தத் துறையின் வேலை வாய்ப்பு ஐம்பது சதவிகிதம் குறையும். ஹோட்டல் மற்றும் ரிசார்ட்ஸ் (ஹாஸ்பிடாலிட்டி) தொழிலில் கிட்டத்தட்ட நாலரை லட்சம் வேலை வாய்ப்புகள் உருவாகும் நிலையிலிருந்து இரண்டு லட்சம் வாய்ப்புகளே என்ற நிலைக்கு இறங்கும். கல்வித்துறை மட்டும் எந்தப் பாதிப்புக்கும் உள்ளாகாமல் ஒன்றே கால் லட்சம் வாய்ப்புகளைக் கொடுக்கும். எரிசக்தி, பெட்ரோலியம் துறைகளும் சரிவைச் சந்தித்து வாய்ப்புகள் ஐம்பது சதவிகிதமாகக் குறையும். ஆக 2009ல் ஏழு லட்சம் வேலை வாய்ப்புகள் உருவாகக் கூடும். இது ஆருடமோ, ஜோஸியமோ அல்ல. முறையாகச் செய்யப்பட்ட ஆய்வு.

## ஜாலி ஸ்டோர்ஸ்



# ஆடிப்போகும் அறிக்கை டான்சு

உத்தமபுத்திரன்

**சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் ரசிகர்களைச் சந்தித்து அரசியலுக்கு வரப்போவதாக சூசகமாகத் தெரிவித்தது பற்றி... சில அரசியல் தலைவர்களின் (கற்பனை) அறிக்கை.**

**கலைஞர் :** *(கவிதையில்)*

கருப்புச் சிங்கமாய்! நெருப்புத் துண்டமாய்!

பாதி தமிழகத்து பற்றாக்குறை தீர்க்கும்

உன் பார்வையில் கிடைக்கும் மின்சாரம்!

எனவே...

எழுகவே தம்பி ரஜினி!

வாக்கெடுக்காத முடியை வாரிக்கொண்டு...

சிக்கில்லாத முடியைச் சீவிக்கொண்டு... சிலிர்த்தெழு

குழம்பியதும், குழப்பியதும் போதும்!

கும்பிட்டு அழைக்கிறேன் கூட்டணிக்கு வா...!

**ஜெயலலிதா**

ரஜினியை எனக்கெதிராகத் தூண்டி விட்டவரே இந்த மைனாரிட்டி ஆட்சி நடத்தும் கருணாநிதிதான் என்று உள்துறை, வெளித்துறை, பக்கவாட்டுத் துறை மூலம் செய்தி அறிந்தேன். குண்டுகுழி, இண்டு இடுக்குகளில் குப்பை அள்ளாத சப்பை மேட்டரோடு... அரசியலுக்கு வர நினைக்கும் ரஜினியை எதிர்த்தும் அ.இ.அ.தி.மு.க. முட்டுச்சந்துக்கு சந்து ஆர்ப்பாட்டம் நடத்தும்.

**விஜயகாந்த்**

ரெண்டும்... ரெண்டும் அஞ்சுங்கிற கணக்குகூடத் தெரியாத ரஜினி, அரசியலுக்கு வந்து எந்தப் புண்ணியமும் இல்ல. இலங்கைத் தமிழர் நிவாரண நிதியை மறைக்கிறதுக்காக ரஜினியை வெச்சு மக்களைத் திசைதிருப்புகிறார் கலைஞர். நாற்காலிக்கு ஆசைப்படும் ரஜினிக்கு மொத்தம் எத்தனை ரேஷன் கடையிருக்கு தெரியுமா? தமிழ்நாட்டுல இருக்கிற மூணு லட்சத்து

அறுபதாயிரத்து எழுநூற்றிப் பன்னிரண்டு டீ கடையில எத்தனை கடை நாயர் நடத்துறாங்கன்னு தெரியுமா?

**விஜய டி. ராஜேந்தர்**

ரஜினிக்கு சினிமாவுல இல்ல சான்ஸு, அதனால நகர்த்தறாரு காயின்ஸு, சும்மா குடுத்துப் பாக்கறாரு வாய்ஸு, வந்தாக்க ஆடிப்போகும் டப்பா டான்ஸு.

**ராமதாஸ்**

தமிழ்நாட்டு மகப்பேறு மருத்துவ மனையில... தமிழ் மருத்துவர் பிரவசம் பார்த்து, தமிழில் அழுது பிறந்த தமிழன் தான் தமிழ்நாட்டை ஆளணும். முதல்ல அவரோட பேரை ரசினின்னு மாத்தணும். அது மட்டுமல்லாமல் சினிமாவில் புகைப் பிடித்தும், மது குடித்தும் இளைய சமுதா யத்தைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட் டார் ரசினி. அப்படி அவர் அரசியலுக்கு வரவேண்டுமென்றால் சிறையில் இருக் கும் எங்கள் 'காடுவெட்டி' குருவோடு நேருக்கு நேர் நின்று சொற்போர் நடத்த வேண்டும். தயாரா?

**இல.கணேசன்**

ரஜினி அரசியலுக்கு வருவது குறித்து பா.ஜ.க. மட்டற்ற மகிழ்ச் சியைத் தெரிவித்துக் கொள் கிறது. அவரைப் போன்ற ஆன்மிகவாதிகள் அரசிய லுக்கு கண்டிப்பாக வர வேண்டுமென்பதுதான் எங்கள் கட்சியின் நிலைப் பாடு. அன்று ரஜினி ரசிகர் கள் கூட்டிய கூட்டத்தி லேயே, கூட்டத்தோடு கூட்டமாக கூட்டணி பேச பா.ஜ.க. குழுவை அனுப் பியது. ஆனால், கூட்டம் முடித்து கிளம்பிய ரஜினியின் நடை வேகத் துக்கு ஈடுகொடுத்து ஓடிப்போய், அவரைக் குறுக்கே நின்று பேச முடியாததால் திரும்பி விட்டனர். இருப்பினும் தொடர்ந்து எங்கள் முயற்சி தொடரும்.

**தா. பாண்டியன்**

தோழர் ரஜினி அவர்கள் அரசியலுக்கு வருவதும், வராததும் அவருடைய சொந்த விருப்பம். அதில் கம்யூனிஸ்ட் கட்சி ஒரு போதும் தலையிடாது. ரசிகர்கள் ரஜினி சந்திப்புக்குப் பின்னால் இரண்டு முறை அவரை அவரது இல்லத்தில் சந்தித்தது உண்மைதான். அதை மறைக்கவோ... மறுக்கவோ எங்களுக்கு அவசியமும் இல்லை. பயமும் இல்லை. அவரது



வீட்டில் காப்பி நன்றாக இருக்குமென்று சொன்னார்கள். அதைப் பருகத்தான் சென்றோமே தவிர, கூட்டணி பற்றிப் பேசுவதற்காக அல்ல. இதை மக்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

**குண்டுகுழி, இண்டு இடுக்குகளில் குப்பை அள்ளாத சப்பை மேட்டரோடு... அரசியலுக்கு வர நினைக்கிறார் ரஜினி.**

**வைகோ**

என் நெடுநாளைய நண்பர் ரஜினிகாந்த் அவர்களுக்கு ஒன்றை மட்டும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். நீங்கள் அரிதாரம் மட்டும் பூசி வளர்ந்தவர். நான் 1967-ல் பேரறிஞர் அண்ணா வாங்கித் தந்த சிலேட்டில் அ, ஆ, இ, ஈ எழுதிப் பழகி வளர்ந்தவன். 'தளபதி'யாக நீங்கள் வேடமிட்டிருக்கலாம். 'மன்ன'னாக பவனி வந்திருக்கலாம். 'படையப்பா'வாக எதிரிகளைப் பந்தாடியிருக்கலாம். சினிமா வேறு அரசியல் வேறு. 'பாயும் புலி' படத்தைக் காரணம் காட்டி, நீங்கள் புலிகளுக்கு ஆதரவு என்று கைது செய்யலாம். எச்சரிக்கையுடன் இருங்கள். என்னை 'பொடா'வில் போட்டார்கள்; 'தடா'வில் போட்டார்கள்; ஏன்? 'விலா'வில் கூட ரெண்டு போட்டார்கள்; கடாயில் மட்டும்தான் போட்டு வறுக்கவில்லை. ஆனாலும் நான் கலங்கவில்லை. நீங்களும் கலங்கக்கூடாது. ●



பிரான்சிஸ் கிருபா

# பாடலுக்கு ஆயுசு கம்மி!

மெசியாவின் காயங்கள், வலியோடு முறியும் மின்னல், நிழலன்றி ஏதும் அற்றவன் என்ற கவிதைத் தொகுப்புகளுக்குச் சொந்தக்காரர் பிரான்சிஸ் கிருபா.

சிறந்த இளைய படைப்பாளிக்கு நெய்தல் அமைப்பு வழங்கும் 'சுந்தரராமசாமி விருதை' இவ்வாண்டுக்கென கிருபா பெற்றிருக்கிறார். திருநெல்வேலியில் 'பத்தினிப் பாறை' எனும் குக்கிராமத்துக் கவிதைக்காரன் பாடலாசிரியராகவும் வசனகர்த்தாவாகவும் முன்னகர்ந்து செல்கிறார். அவரை இந்த விருதின் பொருட்டு வாழ்த்தச் சந்தித்தபோது...

**இலக்கியத்தில் நீங்கள் எந்த இஸம், இயக்கம், குழு சொல்ல முடியுமா?**

''நான் எந்தக் குழுவிலும் இல்லை. என் படைப்பு இஸத்தைக் கொண்டு உருவாகவில்லை. படைப்பில் இஸங்களைக் குழைக்கலாம். ஆனால், இஸத்தைத் தலைக்குக் கிரீடமாக்கக் கூடாது.''

**இலக்கியத்திலிருந்து அடுத்த நகர்வு சினிமாவா?**

''நான் சினிமாவிலிருந்து (காமராஜ் படத்தில் திரைக்கதை, வசனம் எழுதியபின்) கவிதைக்கு வந்தவன். எழுத்து வடிவத்தில் எங்கிருந்து எதைச் செய்தாலும் சிறப்பாக இருக்க வேண்டும். அவ்வளவுதான்.''

**கவிதையின் வெற்றி; திரைப்பாடல் வெற்றி எது உங்களைத் திருப்திப்படுத்துகிறது?**

''பாடலுக்கு ஆயுள் குறைவுதான். ஆனால் கவிதையின் ஆயுளோ ஒவ்வொரு வாசகன் வரும் போதும் கூடிக்கொண்டே இருக்கும். கவிதையின் வெற்றி என்னுடையது. பாடலின் வெற்றி என் வெற்றி அல்ல - அது கூட்டு வெற்றி. அதற்குத் தனி உரிமை கோர முடியாது.''

**உங்கள் பாடலைப் போல உங்கள் நவீன கவிதையை எளிதில் புரியவைக்கலாமே?**

''புறம் சார்ந்த பிரச்னைகள் விஞ்ஞானத்தின் கடமையாகிவிட்டது. எனவே மீதியிருக்கும் அகம்தான் இலக்கியத்தின் பங்களிப்பாகவும் பதிவாகவும் உள்ளது. அதில் கவிதை புரிவதற்கானது அல்ல; உணர்வதற்கானது. வேதனையை, வலியைப் புரிந்து கொள்ள முடியாது; உணரத்தான் முடியும். புரியாமை வாசகனின் பிரச்னை.''

*இப்படியான நீண்ட சந்திப்பில் பிரான்சிஸ் கிருபாவுடனான தர்க்கம் முற்றுப்பெறாமல் தொடர்ந்துகொண்டேயிருந்தது; அவரது தேடலும் வெற்றியும் போல.*

**- அமிர்தா**

கவிதை

# நாய் வேட்டை!

உங்களுக்குள்
இடைவிடாமல் யாரையேனும்
துரத்தியபடியிருக்கின்றன
உங்கள் வெறிநாய்கள்.
பித்தம் கொண்டலையும்
நாட்களின் பின்னால்
காரணமற்றுத் துரத்தும் நாய்கள்
எதையும் கண்டறிய இயலாததில்
மனத்துன்பத்தில் உழல்கின்றன.
உன்மத்த நாய்களை
வேட்டையாட வருகிறவர்கள்
அவர்களாலேயே குதறப்பட்டுவிடுவதால்
நிரம்பிக் கொண்டேயிருக்கின்றன
நாய்களின் எண்ணிக்கை.
பிறகொரு நாள் இது
நாய் தேசமாகி விடும்.
அப்போது
யாரும் யாரையும் வேட்டையாடுவதில்
பிரச்னையேதும் இருக்கப் போவதில்லை!



க. அம்சப்ரியா



''மிஸ்டர், ஏன் என் பின்னால இந்த இருட்டுல 'ஃபாலோ' பண்றீங்க?''

''வேற என்ன, இந்த இருட்டுல முன்னால தனியா போக பயமா இருக்குது!''

– வெ. சீதாராமன்



''ஒண்ணு, இந்த வீட்டுல நான் இருக்கணும்; அல்லது உங்க அம்மா இருக்கணும்...''

''எப்படியும் நான் இருக்கக்கூடாது; அதானே...?!''

– சீர்காழி ரேவதி

# மாண்புமிகு புள்ளி



''நம்ம தலைவர் 'புள்ளி விவரம்' தந்து பேசறதுல பெரிய ஆளு!''

''இங்கே கூடியிருக்கும் 'எழுநூத்தி எழுபத்தி ரெண்டு' தொண்டர்களே, கூட்டி வரப்பட்ட 'இருநூத்திப் பத்து' நண்பர்களேன்னு, மேடைல அவர் பேசும்போதே நல்லா தெரியுதே...''

– வெ. சீதாராமன்

''என்னய்யா இது? மீட்டிங் நடக்கறப்ப அந்த ஆளு பாதில எந்திரிச்சுப் போறான்...''

''அவர் பகுதி நேரத் தொண்டர் தலைவரே!''

- அம்பை தேவா



# தலைவர் ஜோக்

''போரில் நமது மன்னர் புலி என்பதை ஒப்புக்கொள்கிறேன்...''

''எப்படிச் சொல்கிறாய்...?''

''எதிரி மன்னனின் மனைவி இவரை முறத்தால் அடித்துத் துரத்தியிருக்கிறாள்...''

- கே. ஆனந்தன்

''எங்க கிராமத்து ரோடு மழையில பெயர்ந்து குண்டும் குழியுமா இருக்கு. நீங்க வந்து பார்க்கணும் சார்.''

''நான் பார்த்து என்ன செய்ய? வெடிகுண்டு நிபுணரை அனுப்புறேன். அவர் வந்து எந்த ரக குண்டுகள் குழிக்குள்ளே இருக்குன்னு பார்ப்பார்.''

- அரிசி ஸ்ரீராம்.





# அன்றும் இன்றும் என்றும்



மூன்று பக்கத்துக்குள் - மூன்றே மூன்று சின்னஞ்சிறு பக்கங்களுக்குள் - பெரிய விஷயம் எதைப் பற்றித்தான் நான் எழுத முடியும்? ஒன்றும் புரியவில்லையே? தெய்வமே? நீதான் துணை! என்று தவித்தேன். கடவுள் கைகொடுத்தார். ''என்னைப் பற்றி எழுது'' என்று ஓர் அசரீரி வாக்கு ஏற்பட்டது. ''திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை.''

ஆமாம்; கடவுள் விஷயத்தில் ஒரு பெரிய சௌகரியம் உண்டு. அவரைப் பற்றி ஒரே ஒரு வார்த்தையிலும் சொல்லலாம்; ஒன்பதினாயிரம் புத்தகங்களும் எழுதலாம். கடவுளைப் பற்றி என்ன வேண்டுமென்றாலும் பரிகாஸம் செய்யலாம். நகைச்சுவையேயில்லாத மனிதர்களைப் போல சுவாமி சண்டைக்கு வரமாட்டார். மான நஷ்ட வழக்கும் தொடர மாட்டார். அவ்வளவு ஏன்? திட்டினால் திருப்பித் திட்டுவாரோ என்ற பயங்கூட, அவர் விஷயத்தில் வேண்டியதில்லை.

கடவுளைப் பற்றிய பிரச்னைகளில் மிகவும் முக்கியமானது, 'கடவுள் உண்டா... இல்லையா?' என்பதுதான். மனிதன் தோன்றிய காலத்திலிருந்து இந்தப் பிரச்னையும் இருந்து வருகிறது.

கடவுள் இருந்தாலும் சரி, இல்லாமற் போனாலும் சரி, அவர் மனிதனுடைய காரியங்களில் தலையிடுவதாகத் தெரியவில்லை. அப்படித் தலையிட்டாலும் தம்மிஷ்டப்படி தலையிடுகிறாரேயன்றி, மனிதனுடைய வேண்டுகோளை முன்னிட்டுத் தலையிடுவதாகக் காணப்படவில்லை.

கடவுள் தீய பிரார்த்தனைகளை நிறைவேற்ற மாட்டார்; நல்ல பிரார்த்தனைகளைத்தான் நிறைவேற்றுவார் என்று சொல்லலாம். அப்படியும் காணப்படவில்லை. ஆங்கிலேயர் பாடும் தேசிய கீதத்தில், ''கடவுளே! எங்கள் அரசரைக் காப்பாற்றும்; அவருடைய சத்துருக்களை நிர்மூலம் செய்யும்; எங்களுக்கு வெற்றியைக் கொடும்'' என்று பிரார்த்தனை செய்துவருகிறார்கள். சென்ற முந்நூறு வருட காலமாக ஆங்கில ஜாதியாரின்




# கடவுள்

**அமரர் கல்கி**

மேற்படி பிரார்த்தனை ஏறக்குறைய நிறைவேறியும் வருகிறது! ஆனால், ஏழை இந்தியர்களாகிய நாம், ''சுவாமி எங்கள் தேசத்தில் நாங்கள் இராஜ்யம் நடத்த அருள் புரியுங்கள்'' என்றுதான் கேட்கிறோம். இந்தப் பிரார்த்தனைக்கு பகவான் செவிடாயிருக்கிறார்.

கடவுளுக்கு மனிதன் நன்றி செலுத்த வேண்டும். அப்படியானால் எதற்காக? - 'மனிதனைக் கடவுள் படைத்ததற்காக' என்று சிலர் சொல்கிறார்கள். இந்த விஷயத்தில் கடவுள்தான் மனிதனுக்கு நன்றி செலுத்தவேண்டுமென்று நான் நினைக்கிறேன். மனிதனைப் படைத்தது கடவுள் என்பதற்கு ஆதாரம் எதுவும் இல்லை; கடவுளை மனிதன் சிருஷ்டித்தது என்னவோ நிச்சயம். ஆனால், மனிதன் தம்மைப் படைத்ததற்காகக் கடவுள் அவனிடம் நன்றி செலுத்துவார் என்று தோன்றவில்லை. தம் பெயரால் உலகில் நடக்கும் கோர கிருத்யங்களைப் பார்க்கும்போது, அவருக்குத் தம்மைப் படைத்த மனிதன் மேல் கோபம் உண்டாகுமென்றே தோன்றுகிறது.

'மலைகளையும், நதிகளையும், மரங்களையும், தானியங்களையும் பகவான் மனிதனுக்காகப் படைத்திருக்கிறாரே!' என்று சிலர் சொல்கிறார்கள். மனிதனுக்காகப் படைத்த பகவான் எரிமலைகளையும், பூகம்பங்களையும், பிளேக், காலராவையும், தேள், பாம்புகளையும் ரெஜினால்டு கிராடாக்குளையும், ஏ.பி. பாத்ரோக்களையும் ஏன் படைத்தார்?

உலகம் மனிதனுக்காக சிருஷ்டிக்கப்பட்டது என்பதைப் போன்ற அகம்பாவமான கொள்கை வேறொன்றுமில்லை. படைப்பில் மனிதன் அற்பத்திலும் அற்பமானவன். சிருஷ்டி இரகசியத்தை ஒருவரும் அறிந்ததில்லை. எவரேனும் அறிந்தபோதிலும் வெளியிட்டுச் சொன்னது

கிடையாது. கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.



"இந்த பல் டாக்டர் ரொம்ப காஸ்ட்லி!"
"அப்படியா?"
"மேல் வரிசை, கீழ் வரிசைப் பல்லுக்குத் தனித் தனியா ரூத் பேஸ்ட் எழுதிக் கொடுக்கறார்!"
– அம்பை தேவா

சுவாமிக்கு வேண்டுதல் செய்து கொள்வதில் எவ்வளவோ விநோதங்கள் இருக்கின்றன. 'திருப்பதி வேங்கடாசலபதி! என் பிள்ளைக்கு நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் ஆகட்டும், உன் உண்டியலில் ஒரு ரூபாய் போடுகிறேன்' என்று தாயார் வேண்டிக் கொள்கிறாள். இங்கே கடவுள் உத்தியோகத் தரகர் ஆகிறார். 1% அவருக்குக் கமிஷன். உத்தியோகஸ்தர் ஒருவர் தமக்கு வரும் 'மேல் வரும்படி'க்கெல்லாம் ரூபாய்க்கு காலணா வீதம் உண்டியலில் சேர்ப்பிக்கிறார். இதன் மூலம் லஞ்சம் வாங்குகிற பாவத்தை முழுதும், பகவான் மேலேயே போட்டு விடுவதாக அவர் எண்ணம்.

இதனாலெல்லாம் 'கடவுள் வேண்டாம்' என்று நான் சொல்வதாகத் தயவு செய்து நினையாதீர்கள். அதற்கு மாறாக, கடவுள் மிகவும் உபயோகமானவர் என்று நினைப்பவர்களில் நான் ஒருவன்.

முதலாவதாக, கடவுள் நம்பிக்கையுள்ளவர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் செய்ய வேண்டியதில்லை. இது எவ்வளவு பெரிய சௌகரியம் பாருங்கள்! எத்தனையோ இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டுகளுக்கு நான் டிமிக்கி கொடுத்து வந்திருப்பதெல்லாம், கடவுளிடம் எனக்குள்ள நம்பிக்கையினால்தான். ஏஜெண்ட் தொண்டையைக் கனைத்துக்கொண்டு ஆரம்பிக்கும்போதே, நான் அவருடைய வாயை அடைத்துவிடுவேன். 'நான் நாஸ்திகனல்ல, சுவாமி! பகவானிடம் நம்பிக்கையுள்ளவன்; பகவான் ஒருவர் இருக்கும்போதே நான் ஏன் பெண்டாட்டி பிள்ளைகளைப் பற்றிக் கவலைப் பட வேண்டும்? மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுகிறான்! 'இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி விட்ட சிவனும் செத்துவிட்டானோ?' ' என்று பிரசங்கத்தைத் தொடங்குவேன். 'தயவுசெய்து இந்த மாதிரி போதனை மற்றவர்களுக்குச் செய்ய வேண்டாம்' என்று ஏஜெண்ட் மன்றாடிவிட்டுப் போய்ச் சேருவார்.

கடவுளின் மற்றொரு பெரிய உபயோகம் என்னவென்றால், அவருடைய பெயரால் பொய்யையும் மெய்யாக்கி விடலாமென்பதே. முக்கியமாக, கோர்ட்டுகளில் பொய் சாட்சி சொல்வோருக்கு, பகவானுடைய திருநாமம் இன்றியமையாத சாதனமாயிருக்கிறது.

அவ்வளவு ஏன்? கடவுள் நம்பிக்கை மட்டும் இல்லாவிட்டால் நம்மில் பலர் உயிர் வாழமுடியுமென்றே தோன்றவில்லை.

**– ஆனந்த விகடன் 15.04.1933**

# அருள்வாக்கு

**கா**ண்கிற உலகம் பலவிதமாக இருந்தாலும், ஒன்றேதான் இத்தனையும் ஆகியிருக்கிறது என்பதை நவீன சயன்ஸ் தெளிவாக ஒப்புக்கொண்டு நிலைநாட்டுகிறது. ஐம்பது வருஷங்களுக்கு முன், உலக வஸ்துக்கள் எல்லாம் எழுபத்திரண்டு மூலப் பொருள்களுக்குள் (elements) அடங்குவதாக ஸயன்ஸ் சொல்லி வந்தது. இந்த மூலப் பொருட்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை என்பதே அன்றைய கருத்து. ஆனால், இப்போது அணு (atom) பற்றிய அறிவு விருத்தியான பின் இந்த மூலப்பொருள்கள் எல்லாமும்கூட வேறு வேறான பொருட்கள் அல்ல என்றும், ஒரே சக்தி (energy) தான் இவை எல்லாமாகவும் ஆகியுள்ளது என்றும் ஸயன்ஸ் நிபுணர்கள் நிலைநாட்டியிருக்கிறார்கள். பொருள் (matter), சக்தி (energy) இவையும் வேறு வேறானவை அல்ல என்று நவீன ஸயன்ஸ் சொல்கிறது. ஆக, அத்வைதம்தான் ஸயன்ஸுூம் நமக்குக் காட்டுகிற உண்மை. ஐன்ஸ்டைன், ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்ற பிரபல ஸயன்ஸ் நிபுணர்கள், உபநிஷதமும் சங்கர பகவத் பாதாளும் உபதேசித்த அத்வைத சித்தாந்தத்துக்கு மிகவும் நெருங்கி வந்து விட்டார்கள்.

உலகம் மாயை என்று அத்வைதம் கூறுவதற்குப் பொருள் யாதெனில், 'உலகம் இறுதி சத்தியமல்ல! இது விவகாரத்துக்கு மட்டுமே சத்தியம்; இதனுடைய இருப்பும் பிரம்மம் என்ற ஒன்றைச் சார்ந்ததே' என்பதுதான். இதையே மேற்சொன்ன ஸயன்ஸ் நிபுணர்களும் சொல்கிறார்கள். ''உலக இயக்கமெல்லாம் இன்னொன்றைச் சார்ந்தவை ('relative') தான். முழு உண்மை ('absolute') அல்ல'' என்கிறார்கள். சக்தியும் பொருளும் ஒன்று என்ற பெரிய உண்மையைக் கண்ட அணு விஞ்ஞானிகள், அந்த அறிவைக் கொண்டே அணுகுண்டைக் கண்டுபிடித்திருக்கிறார்கள் என்பதுதான் துக்கமாக இருக்கிறது.

ஜீவகுலம் எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானமும் ஸயன்ஸ் வழியாக ஏற்பட்டால், அணுகுண்டைத் தயாரித்த நவீன ஸயன்ஸே ஆத்மஹானிக்குப் பதிலாக மகத்தான ஆத்ம க்ஷேமம் செய்ததாகவும் ஏற்படும்.

– ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்





# சொர்க்க ரகசியம்

எப்போதும் சோகமும், சிடுமூஞ்சித்தனமுமாய் இருக்கும் கல்பனாவின் வீடு, கடந்த ஒரு வாரமாய் தலைகீழாய் மாறியிருந்தது. சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுவதும், ஒருவரையொருவர் கேலி செய்து அடித்துப் பிடித்து விளையாடுவதுமாய் மகிழ்ச்சி கரைபுரண்டு சொர்க்கமாயிருந்தது. பொறுக்க முடியாமல் கேட்டேன், "இது உங்க வீடுதானா? எப்படி கல்பனா இப்படி?"

"ரொம்ப சிம்ப்பிள். டி.வி. கெட்டுப் போய் பத்து நாளாச்சு... அதான்" என்றாள் கூலாக கல்பனா.



# விடை

சிவாவும், வாசுவும் முன்னும் பின்னும் உட்கார்ந்து, அந்த வேலைக்குப் பரீட்சை எழுதினார்கள். சில கேள்விகளுக்கு ஒரே மாதிரி பதில் எழுதியிருந்த அவர்களில், யாரை செலக்ட் செய்வது என்பதில் அந்த அதிகாரி ராஜனுக்குக் குழப்பம் வந்தது. தீவிர யோசனைக்குப் பிறகு சிவாவுக்கு வேலை கொடுத்தார் அதிகாரி.

மேலதிகாரி கேட்டார், "எப்படி சிவாவை செலக்ட் பண்ணீங்க?"

"ரொம்ப சிம்பிள் ஸார்! ஒரு கேள்விக்கு சிவா 'தெரியாது' என்று எழுதியிருந்தான். அதே கேள்விக்கு 'எனக்கும் தெரியாது' என்று வாசு பதில் எழுதியிருந்தான்."

எஸ். ராமன்

கமலா இந்திரஜித்

# கண்ணாடி கேசட்

அன்று இருபதாவது திருமண நாள்.

''ஏங்க நம்ம கல்யாண கேசட்டைப் போடுங்களேன் பார்ப்போம்''

''வேண்டாண்டி... தப்பை ஒத்துக்கிற புத்தியிருந்தா அதைப் பார்க்கலாம்''

''எதுக்கு எதைச் சொல்றீங்க?'' என்றபடி ராதாவே கேசட்டைச் சுழல விட்டாள். சில நிமிடங்களில் கண்கலங்கியபடி, ''இந்த இருபது வருடத்தில் செத்தது கொஞ்சம் சண்டையில பிரிஞ்சது மிச்சம்னு தாத்தா, பாட்டி, சித்தி, சித்தப்பா, பெரியப்பா மகள்னு எவ்ளோ பேரை நாம இழந்து தனியா இருக்கோமில்ல'' என்றாள் அழுதபடி.

''பழைய கேசட் புதுசையும் சேர்த்துக் காட்டுற கண்ணாடி மாதிரின்னு சொன்னேனே கேட்டியா?'' என்றபடி கேசட்டை நிறுத்தினான் மனோகர்.

''ஏங்க, கோவிச்சுக்கிட்டு இருக்கிற சித்தியை நாமளே தேடிப் போலாமா?'' என்றவளை ஆச்சரியமாய்ப் பார்த்தான் மனோகர். ●



# தண்டனை

''காலையிலே பதினொரு மணிக்கு, கட்டின பொண்டாட்டிய நாலு பேர் முன்னால கைநீட்டி அடிச்சு, என்னை அழ வைச்ச அந்தப் படுபாவிக்கு சரியான தண்டனை கொடுன்னு வேண்டிக்கிட்டேன். கடவுள் காதிலே அது கரெக்டா விழுந்துடுச்சுன்னு நினைக்கிறேன். சாயங்காலம் ஆறு மணிக்கு நாலு ஆம்பிளைங்க, அவனை போட்டு சாத்து, சாத்துன்னு சாத்தி மனசைக் குளிர வைச்சுட்டாங்க. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்ன்னு கரெக்டாதான் சொன்னாங்க...''

என்று தன் தோழியிடம் ஆவேசத்தோடு சொன்ன கமலா மேலும் தொடர்ந்தாள். ''பதினொரு மணி டி.வி. சீரியல்லே பெண்டாட்டிய அடிச்சவனுக்கு, ஆறு மணி சீரியல்ல தண்டனை கிடைச்சிடுச்சில்லே...''



# அன்புள்ள காதலிக்கு...

**1934**ல் ஆஸ்திரியாவிலுள்ள பாட்கஸ்டீன் (Badgastein) என்னும் பகுதியில்தான், எமிலி ஷென்கலை முதன் முதலாகச் சந்தித்தார் போஸ். போஸின் காரியதரிசியாக எமிலி நியமிக்கப்பட்டிருந்தார். எமிலி ஒரு ஆஸ்திரியப் பெண்.

பெரும்பாலும் கடிதங்கள் மூலமாகவே போஸ் எமிலிக்கு சிறு சிறு பணிகளை ஒதுக்குவார். இவர்கள் சந்தித்துக் கொள்வது அரிதாகவே இருக்கும்.

உலகின் எந்த மூலைக்குச் சென்றாலும் எமிலிக்குக் கடிதம் எழுதுவதை மட்டும் போஸ் நிறுத்திக் கொள்ளவேயில்லை. 1934 முதல் 1942 வரை இருவரும் பரிமாறிக் கொண்ட கடிதங்களின் எண்ணிக்கை மட்டுமே 162.

இந்தியப் போராட்டம் எனும் புத்தகத்துக்கு நவம்பர் 29, 1934-ல் போஸ் எழுதிய முன்னுரையில், அவர் குறிப்பாக நன்றி தெரிவித்திருந்தது எமிலிக்கு மட்டுமே.

ஒருமுறை பால்கன் யுத்தம் பற்றி ஒரு கட்டுரை எழுதி, போஸின் பார்வைக்கு அனுப்பியிருந்தார் எமிலி. அதை வாசித்துப் பார்த்த போஸ் பொரிந்து தள்ளிவிட்டார். 'உன்னிடமிருந்து இப்படி ஒரு கட்டுரையை நான் எதிர்பார்க்கவில்லை. உன் ஆங்கிலம் மிக மிக மோசமாக இருக்கிறது. உன்னுடைய மொழிநடை சரியில்லை. நீ குறிப்பிடும் விவரங்கள் தவறு' என்று தொடங்கி எமிலி செய்த ஒவ்வொரு தவறையும் வரிசையாகச் சுட்டிக்காட்டினார் போஸ்.

ஆனால், அடுத்த கடிதத்திலேயே அமைதியாகிவிடுகிறார். 'ஆங்கிலம் உன்னுடைய சொந்த மொழி அல்ல என்று எனக்குத் தெரியும். ஆனால் அப்படியிருந்தும் நீ ஓரளவுக்கு நல்ல ஆங்கிலத்தையே பயன்படுத்துகிறாய். உனக்கு ஆங்கிலம் தெரிந்த அளவுக்கு எனக்கு ஜெர்மனி



★ புத்தகத்திலிருந்து

தெரிந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்!'

தேவைக்கு மீறி எமிலி எப்போதாவது செலவு செய்தால், அவரைக் கடிந்து கொள்ளவும் போஸ் தயங்கியதில்லை. 'என்னுடைய கறுப்பு மேல் கோட்டை அனுப்பு' என்று கேட்பார். எமிலி அவசர அவசரமாக அதை எக்ஸ்பிரஸ் தபாலில் அனுப்பிவைப்பார். 'இதை ஏன் எக்ஸ்பிரஸில் அனுப்பினாய். இது அவ்வளவு முக்கியமா? ஏன் அநாவசியமாக பணத்தை வாரி இறைக்கிறாய்?' என்று கத்துவார். பிறகு, அமைதியாகிவிடுவார்.

'இங்கு பொழுதே போகவில்லை. ஒரு கிராமஃபோன் கருவி மட்டும் இருக்கிறது. ஏதாவது நல்ல ரெக்கார்டுகள் இருந்தால் சொல்' என்று ஆலோசனை கேட்பார். 'விவேகானந்தரின் படைப்புகளைப் படி. பகவத்கீதை படி. பெரும்பாலும் உனக்குப் புரியாது. இருந்தாலும், இயன்றவரை புரிந்துகொள்ள முயற்சி செய்!' என்று உற்சாகமூட்டுவார்.

ஒருமுறை எமிலி அதிர்ஷ்டம் அளிக்கும் சில இலைகளைக் கத்தரித்து போஸுக்கு அனுப்பியிருந்தார். 'இதை வைத்துக் கொண்டால் அதிர்ஷ்டம் கிடைக்கும். நான் பரிசோதித்துப் பார்த்துவிட்டேன். உங்களுக்காக இப்போது இந்த இலைகளை அனுப்பி வைத்திருக்கிறேன். தங்களுடைய பர்ஸில் வைத்துக்கொள்ளவும்' என்று எழுதியிருந்தார்.

போஸ் அளித்த பதில் இதுதான். 'இந்தியாவில் குவியல் குவியலாக மூடநம்பிக்கைகள் நிறைந்திருக்கின்றன. எனக்கு அவற்றில் எதுவொன்றின் மீதும் நம்பிக்கை இருந்ததில்லை. ஆனால், உனக்கும் கூட இப்படி சில நம்பிக்கைகள் இருக்கும் என்பது சுவாரசியமாக உள்ளது. உன்னுடைய உணர்வுகளை எந்த வகையிலாவது காயப்படுத்தியிருந்தால் மன்னிக்கவும்.'

போஸ் எமிலியை எத்தனை ஆழமாகக் காதலித்தார் என்பதைத் தெரிந்து கொள்ள

Subhas Chandra Bose

ஜனவரி 25, 1935 அன்று அவர் எழுதிய இந்த ஒரு கடிதம் போதும்.

'உன்னுடைய தொலைபேசி எண்ணை மறந்துவிட்டிருப்பேன் என்று நினைக்கிறாயா? அதெப்படி முடியும்?'

அடுத்த வரியில் போஸ் இப்படி எழுதுகிறார்.

'என்னுடைய பிறந்த நாளை எனக்கு நினைவூட்டியதற்கு மிக்க நன்றி. என்னுடைய பிறந்த நாள் என்றைக்கு என்பதே எனக்கு மறந்து விட்டது!'

டிசம்பர் 27, 1937ல் போஸ் எமிலியை ரகசியமாகத் திருமணம் செய்துகொண்டார். தனது நெருங்கிய உறவினர்களுக்குக்கூட, தனது திருமணத்தைப் பற்றி எந்த விவரத்தையும் அவர் தெரிவிக்கவில்லை.

சுபாஷ் சந்திரபோஸின் மென்மையான இன்னொரு பக்கத்தைக் காட்டும் லெட்டர்ஸ் டு எமிலிஷென்கல் 1934-1942, கடிதங்களின் தொகுப்பான இந்நூல், ஒரு இந்தியனின் காதல் கல்வெட்டு.

• மருதன்

**மேஷம்:** வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். திருமணப் பேச்சு வார்த்தை பலிதமாகும். படிப்பில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். வீடு/மனை வாங்க சிறந்த தருணம். உடல் ஆரோக்கியம் சீராகும். வேலையில் உயர்வு உண்டாகும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் மிகுதியாகும்.

**ரிஷபம்:** உடல் ஆரோக்கியம் சீராகும். மனக்கவலை தீரும். நீண்டநாள் முடிவு பெறாத பிரச்னைகள் முடிவுக்கு வரும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். வேலைப் பளு குறையும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். பண வருவாய் பெருகும். சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் மிகுதியாகும்.

**மிதுனம்:** சுபநிகழ்ச்சி கைகூடும். கூட்டாளிகள் விட்டு விலகிப் போவார்கள். இல்லற வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வாக்குவாதம் தவிர்க்கவும். கைப்பொருள் மீது கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம். படிப்பில் அதிக அக்கறை எடுக்கவும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். ஜாமீன் போடக்கூடாது. வேலை மாற்றம் ஏற்படும். ராகு/கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கடகம்:** இந்த வார இறுதியில் நினைத்தது நடக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். வெளிநாடு செல்லும் யோகம் உண்டாகும். வருவாய் அதிகரிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன்கள் அதிகரிக்கும்.

**சிம்மம்:** மனப்பிரமை தீரும். அயல்நாட்டிலிருந்து அழைப்பு வந்து சேரும். இட மாற்றம் ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். வேலையில் உயர்வு ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

**கன்னி:** மன நிறைவான வாரம். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட்டாளிகள் விட்டு விலகிப் போவார்கள். மன சஞ்சலம் தீரும். புதிய தொழில் துவங்க, நல்ல பலன் அளிக்கும். சுபச் செலவு

# நடக்குமென்பார்;

உண்டு. வியாபாரத்தில் வருமானம் அதிகரிக்கும். சனி/ராகு/கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** பேச்சில் நிதானம் தேவை. பண வருவாய் பெருகும். வீடு/மனை மூலம் ஆதாயம் கிட்டும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். மனக்கிலேசம் விலகும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** அற்புதமான வாரம்.

**30.11.08 முதல் 06.12.08 வரை**



* பராக் ஒபாமா சிறுவயதில் தன் தாயுடன்

செல்லமே!
அமெரிக்க ராஜா
'பராக் பராக்'–ன்னு
சொல்லுவாங்கன்னு
உம் பேர் ராசியிலேயே
தெரியுமேடா!

# நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்

வாக்குவன்மை மேலோங்கும். வித்தையில் நல்ல மேன்மை உண்டாகும். புண்ணியஸ்தலம் செல்வீர்கள். பண வரவு பெருகும். சாதுக்கள் தரிசனம் கிட்டும். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். வெளியூர் பிரயாணம் வந்து சேரும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

**தனுசு:** மனத்துக்குப் புத்துணர்ச்சி ஏற்படும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். வராத நிலுவைகள் வந்து சேரும். மன மகிழ்ச்சி ஏற்படும். பகைமை விலகி நட்பு ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். பண வருவாய் அதிகரிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** நீண்ட நாள் பிரச்னைக்குத் தீர்வு கிடைக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். கல்வி வளம் முன்னேற்றம் அடையும். வராத நிலுவைகள் வந்து சேரும். முடிவு பெறாமல் இருந்து வந்த வழக்கு முடிவுக்கு வரும். மந்தமான சூழ்நிலை மாறி வியாபார அபிவிருத்தி ஏற்படும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** மனத்துக்கு நிறைவான பலனை அளிக்கும் வாரம். பணம், காசு குறைவு இருக்காது. கடன் தொல்லையிலிருந்து விடுதலை கிட்டும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். புதிய ஆபரணப் பொருள் வாங்குவீர்கள். வராத நிலுவைகள் வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** மன சந்தோஷம் கிட்டும். புதிய தொழில் முயற்சி வெற்றி அளிக்கும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். பண வசதி பெருகும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். வழக்கு வெற்றி அளிக்கும். வெளிநாடு செல்லும் யோகம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல வருமானம் கிட்டும். ராகு/கேது/குரு வழிபாடு செய்தல் நலம். ○

# மண்டையைக் குடையும் மலேகான்!



மகாராஷ்ட்ரா மாநிலம் நாசிக் அருகிலுள்ள மலேகான் என்ற நகரிலுள்ள பள்ளிவாசல். ரம்சான் உண்ணாநோன்பை மாலையில் முடிப்பதற்காக, தொழுகைக்கு கூடுகிறார்கள் இஸ்லாமியர்கள். அப்போது பள்ளிவாசல் வாசலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டார் சைக்கிள் வெடித்துச் சிதறியது. ஆறு பேர் சம்பவ இடத்திலேயே இறந்து போனார்கள். கடந்த செப்டம்பர் மாதம் நடந்த இந்தச் சோக சம்பவத்தை விசாரித்த மாநில பயங்கரவாதத் தடுப்பு போலீஸ், இந்தக் குண்டு வெடிப்பில் 'அபிநவ் பாரத்' என்ற அமைப்புக்குத் தொடர்பிருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறது. இதற்கு மூளையாக இருந்து செயல்பட்டவர் ராணுவ லெப்டினென்ட் கர்னல் ஸ்ரீகாந்த் ப்ரோஹித் என்பதும் அம்பலமாகியிருக்கிறது. இந்தச் சம்பவம் தொடர்பாக ஸ்ரீகாந்த் ப்ரோஹித், பெண் சாமியார் பிரக்யா சிங், ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி, பணியிலுள்ள ஒரு ராணுவ அதிகாரி மற்றும் ஹிந்துத்வா அமைப்பைச் சேர்ந்தவர்களைக் கைது செய்திருக்கிறது காவல் துறை. இதனால் ராணுவத்தின் ஒழுக்கமும், கண்ணியமும், கட்டுப்பாடும் கேள்விக்குறியாகிவிட்டது என்றும் சிலர் சொல்கிறார்கள். தியாகத்துக்கும் ஒழுக்கத்துக்கும் எடுத்துக்காட்டாய் விளங்கும் நமது ராணுவத்தில் 'ஹிந்துத்வா அமைப்புகள் ஊடுருவிவிட்டதாக' மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி குற்றம் சாட்டியிருக்கிறது.

''நாட்டில் எங்கே குண்டு வெடித்தாலும் இஸ்லாமியத் தீவிரவாதம் என்ற அடைமொழியுடன் செய்திகளை வெளியிடுகின்றன மீடியா. இந்தச் சம்பவத்துக்குப் பிறகு மீடியா மிக எச்சரிக்கையாகச் செய்தி வெளியிட வேண்டும்'' என்கிறார் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியும், சஸ்டைனபிள் லிவ்விங் (Sustainable living) என்ற தன்னார்வ நிறுவனத்தை நடத்தி வருபவருமான தேவசகாயம். இவர் சில வருடங்கள் ராணுவ அதிகாரியாகப் பணிபுரிந்திருக்கிறார். ''இரு சமூகங்களிடையே மோதல்களை வளர்த்து, அதன் மூலம் அரசியல் நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள இதுபோன்ற சதிச்

செயல்களில் ஹிந்துத்வா அமைப்புகள் சில இறங்கியிருக்கின்றன. ராணுவ அதிகாரியின் கைது மூலம், நமது ராணுவத்தின் மேல் வைத்திருக்கும் மதிப்பும் மரியாதையும் இலேசாக ஆட்டம் கண்டிருப்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் இதற்கு ராணுவத்தைப் பற்றி மட்டும் குற்றம் சொல்லிப் பயனில்லை. நமது சமூகம் சீரழிவுக்கு உள்ளாகி வருகிறது. ஜனநாயகத்தின் அமைப்புகள், மக்களுக்கு விரோதமாக செயல்படுகின்றன. சமூகத்தின் எல்லாப்





பிரிவுகளும் செல்லரித்துப் போவது போல, ராணுவத்திலும் ஒரு சில கறுப்பு ஆடுகள் இருக்கின்றன. மொத்த சீரழிவுக்கும் முக்கியக் காரணம், நமது நாட்டில் மக்களால் போற்றத்தக்க, அப்பழுக்கில்லாத தலைவர்கள் இல்லாததுதான்'' என்கிறார்.

''முழு விசாரணை நடந்து உண்மைகள் வெளிவரட்டும். ஏனென்றால் இதுபோன்ற சம்பவங்களில், முடிவில் குற்றம் சாட்டப்பட்டவர்கள், நீதிமன்ற விசாரணையில் விடுதலை செய்யப்படுவது சகஜமாக இருக்கிறது. எது எப்படியிருந்தாலும், ஒரு தனிப்பட்ட மனிதரின் செயல்பாடு, ராணுவத்தின் புனிதத்தைக் கெடுத்துவிடாது'' என்று சொல்கிறார் ஓய்வு பெற்ற கர்னல் ஹரிஹரன்.

''துரதிர்ஷ்டவசமாக நமது நாட்டில் 'மதச் சார்பின்மை' என்ற சொல்லுக்கு வித்தியாசமான அர்த்தங்கள் கற்பிக்கப்படுகின்றன. ஆனால் ராணுவத்தில் நாங்கள் சர்வ மதங்களையும் அங்கீகரித்து அனுசரிக்கும் மனப்போக்கில்தான் பயிற்சி பெறுகிறோம். பன்னிரண்டு லட்சம் பேரைக் கொண்ட நமது ராணுவத்தின் புனிதத்தை, இது போன்ற சில சம்பவங்களின் மூலம் குறைத்து மதிப்பிடவே கூடாது'' என்கிறார் 80 வயதான ஓய்வு பெற்ற மேஜர் ஜெனரல் ஒருவர்.

இதற்கிடையில், சாமியார் தயானந்த பாண்டே இவ்வழக்கு தொடர்பாகக் கைது செய்யப்பட்டுள்ளார். நாக்பூரில் உள்ள போன்சாலா மிலிட்டரி பள்ளி என்ற தனியார் பள்ளியில் ஹிந்துத்வா அமைப்பைச் சேர்ந்தவர்களுக்கு, வெடிகுண்டுகளைத் தயாரிக்கவும், கையாளவும் 2001ல் பயிற்சி அளிக்கப்பட்டதாகவும் செய்திகள் வருகின்றன.

ஹிந்து அமைப்புகளும் இளைஞர்களை மூளைச் சலவை செய்து வன்முறைக்குப் பாதை மாற்ற ஆரம்பிக்கின்றனவா? அதனைத்தடுக்க, அமைதி - நல்லிணக்கம் நிலவ, ஹிந்து மதத் தலைவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?

**- ப்ரியன்**

MIOT College of Nursingகுக்குள் நாம் நுழைந்த சமயம், ரொம்ப அமைதியான கல்லூரிக்குள் காலடி எடுத்து வைத்த பூரிப்பு பரவியது.

''எப்படி இருக்கீங்க?'' எனக் கேட்டதும், ''ஓ ரொம்ப சுகமா இருக்கோம்... ஆனா நாங்க முதல் வருஷம் முதன் முதலா ஆஸ்பிடலுக்குள்ள நுழைந்த நாள் இருக்கே, அப்பப்பா அத நினைச்சா சுகம் எல்லாம் ஓடிடும்'' என ஆரம்பித்தார் யோகிதா. ''நானும் என் தோழியும் முதன் முதலா ஒரு ஆபரேஷன் தியேட்டருக்குள்ள போனோம். ரொம்ப சீரியஸா ஆபரேஷன் நடந்துக்கிட்டு இருந்தது. நாங்களும் கையில க்ளவுஸ், மூஞ்சில மாஸ்க்குன்னு போட்டுக்கிட்டு நின்னு பார்த்துக்கிட்டு இருந்தோம். பாதி ஆபரேஷன் நடந்துக்கிட்டு இருக்கும்போது, டாக்டர் என்னைப் பார்த்து, 'கம் ரீமூவ் தி மாஸ்க்' அப்படீன்னு சொன்னார்.

உடனே நான் என் முகத்துல இருந்த மாஸ்க்கை எடுத்துட்டேன். அப்புறம்தான் புரிஞ்சுது, டாக்டர் தன்னோட முகத்திலேருந்து மாஸ்க்கை எடுக்கச் சொன்னாருன்னு. இந்தக் கூத்து இப்படி நடந்துக்கிட்டே இருக்கும்போது, என் கூட வந்த தோழி திடீர்னு காணாமப் போய்ட்டா.



# நாங்க பிஃப்டி பர்செண்ட் டாக்டர்!

அவ எங்கன்னு நான் பதறிப்போய் நிற்க, அவ என்னடான்னா, ஆபரேஷனைப் பார்த்து மயங்கிக் கீழே விழுந்துட்டா'' என்று அறுவைச் சிகிச்சை நிகழ்ச்சியைப் பற்றி அருமையாகச் சொன்னார்.

''இதெல்லாம் எவ்வளவோ பரவாயில்ல... நாங்க ஒவ்வொருத்தரும் மெண்டல் ஹாஸ்பிட்டல்ல பட்டிருக்கோம் பாருங்க... அத நினைச்சு அழறதா சிரிக்கிறதான்னே தெரியாது. அதெல்லாம் ஒரு காமெடி கலந்த ட்ராஜிடின்னுதான் சொல்லணும். முதல் தடவையா அப்படித்தான் ஒரு மெண்டல் ஹாஸ்பிடலுக்குள்ள நுழைஞ்சோம். யாரு பேஷன்ட் யாரு விஸிட்டர்னே கண்டுபிடிக்க முடியாது. எல்லாருமே பார்க்க ஒரே மாதிரிதான் இருப்பாங்க. என்கிட்ட அன்னைக்கு ஒரு ஸிஸ்டர், 'இந்தாம்மா B3 வார்ட்ல மூணாவது பெட்ல இருக்குற பேஷண்ட்டுக்கு இந்த மருந்தைக் கொடுத்துடு'ன்னு சொல்லி ஒரு பாட்டில் கொடுத்துட்டாங்க. நானும் நேரா போய் மூணாவது பெட்ல படுத்திருந்தவரைத் தட்டி எழுப்பி, வாயைத் திறங்கன்னு சொல்லி மருந்து கொடுக்கப் போனேன். அவர் ஆ ஊன்னு கத்தி, 'நான் பேஷண்ட்டே இல்லீங்க. பேஷண்ட் கூட வந்தவர். சும்மா ரெஸ்ட் எடுக்கலாமேன்னு பெட்ல படுத்திருக்கேன்'னு





சொன்னார்'' என்று திகிலூட்டினார்.

''ஒரு பாட்டிம்மா என்ன நிஜமாலுமே அரை லூஸாக்கின கதையைக் கொஞ்சம் கேளுங்க'' என்றார் வனிதா.

''முதன்முதலா நானும் மென்ட்டல் ஹாஸ்பிடலுக்குப் போறேன். வயசான பாட்டிம்மா மரத்தோட நிழல்ல உட்கார்ந்துக்கிட்டு, 'என் பேத்தியை இங்கதான் அட்மிட் பண்ணியிருக்கோம். அஞ்சு நாள் ஆச்சு. ஏதேதோ திடீர்னு பேசறா, தனக்குத் தானே சிரிச்சுக்கறா'ன்னு ரொம்ப வருத்தத்தோடு பேசினார். பேத்திக்கு என்ன வயசுன்னு கேட்க, '10 வயசும்மா' என்றார்.

'அய்யோ பாவம்' என வார்டுக்குள் நுழைந்து பார்த்தா, அந்த மாதிரி ஒரு சின்னப் பெண்ணே அங்கே இல்ல. அப்புறம்தான் ஒரு ஸிஸ்டர், 'நீங்க இத்தனை நேரம் பேசிக்கிட்டு இருந்தவங்கதான் பேஷண்ட்'னு சொன்னாங்க எப்படி இருந்திருக்கும் பாத்துக்குங்க'' என்று முடித்தார்.

''இப்பல்லாம் இந்த மாதிரி பேஷண்ட்களை எப்படி ஹாண்டில் பண்ணனும்னு கத்துக்கிட்டோம். நீத்து தமிழ் கத்துக்கிட்ட மாதிரி'' என எல்லோரும் நீத்து பக்கம் கையைக் காட்ட,

''நான் கேரளாவிலிருந்து காலேஜுக்கு வந்த புதுசுல ரொம்பத் திண்டாடிப் போயிட்டேன். பேஷண்ட்களோட பேசணும்னா நிச்சயம் தமிழ் கத்துக்கிட்டுத்தான் ஆகணும்னு தெரியும். ஆனாலும் ஆரம்பத்துல மொழிப் பிரச்னையால பேஷண்ட்கிட்ட போய் நீங்க சாப்டாச்சான்னு கேட்கறதுக்குப் பதிலா, நீங்க சாப்பாடு கனிச்சிட்டீங்களான்னு கேட்டு, உங்களுக்கு வலி இருக்கான்னு கேட்க நினைச்சு, உனக்கு வலி இருக்காங்களான்னு கேட்டு, மேம் வருவாங்களான்னு கேட்க நினைத்து மேம் வருவீயான்னு கேட்டதெல்லாம் செம காமெடி'' என்கிறார். ''இன்னும், ஊசில மருந்தே ஏத்தாம ஊசி போட்டது, பேஷண்ட்களுக்கு மாத்தி மாத்தி மருந்து கொடுத்ததுன்னு இப்படி நிறைய பிராக்டிகல்ஸ்ல தப்புத் தப்பா பண்ணி மாட்டி இருக்கோம். ஆனா எங்க மனசைப் பாதிக்கிற ஒரு விஷயம் என்னன்னா சினிமாவுல அட்வர்டைஸ்மென்ட்ல எல்லாம் நர்ஸுங்களை வைச்சு காமெடி பண்றது. இது ரொம்ப வருத்தத்தைத் தருது!'' சீரியஸ் ஆகின்றனர்.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**

## காதைக் குடுங்க...

# சிக்குவாரா ரஜினி?



'ஆண்டவன் கட்டளையிட்டால் அரசியலில் குதிப்பேன்' என்று தன் ரசிகர்களைக் கூட்டி அறிவித்தார் ரஜினி. அந்த ஆண்டவன் கட்டளையை விரைவு படுத்த பா.ஜ.க. முயற்சிப்பதன் அடையாளமே அத்வானி - ரஜினி சந்திப்பு. ''உங்கள் புத்தக ரிலீஸ''க்கு வருகிறேன்'' என்று ரஜினி ஓ.கே. சொன்னாலும், ''கொஞ்சம் தனியாகப் பேசுவது நல்லது'' என்று சோவும், திருநாவுக்கரசரும் அத்வானியைக் கேட்டுக்கொண்டதாகத் தகவல். ஆனால் ரஜினியிடமிருந்து எந்த விதமான பாஸிடிவ் சிக்னலும் கிடைக்கவில்லை. ரஜினி எதிர்பார்க்கும் 'புதிய சூழல்' வந்த பிறகே, இது தொடர்பாக முடிவெடுக்க வேண்டும் என்று அவர் ஏற்கனவே தீர்மானித்து வைத்திருப்பது தான். இருந்தும் 'அரசியலில் தனி ஆவர்த்தனம் வாசிப்பதை பிறகு வைத்துக்கொள்ளுங்கள்; வரும் பாராளுமன்றத் தேர்தலில் குறைந்த பட்சம் பா.ஜ.க.வுக்கு ஆதரவு தெரிவித்து அறிக்கை விடுங்கள்' என்று கொக்கி போடப்பட்டது. 1996ல் ஜெயலலிதாவுக்கு எதிராக அவர் எடுத்த நிலை பாராட்டப்பட்டாலும், அடுத்து 1998, 2004 தேர்தல்களின்போது அவரது சொதப்பலான பேச்சுக்கள் அவரது பாப்புலாரிட்டியைக் கொஞ்சம் அசைத்துப் பார்த்தன. எனவே இம்முறை மிகவும் உஷாராக இருக்க நினைக்கிறார் ரஜினி. என்றாலும் பா.ஜ.க. தூண்டில் தொடர்கிறது. ''அவருக்கு ஆசை இருக்கிறது; பாவம் துணிச்சல் இல்லை'' என்கிறார் பா.ஜ.க தலைவர் ஒருவர்.

● இலங்கைப் பிரச்னையில் நடிகர் விஜய்யின் உண்ணாவிரதத்துக்கு, ஆட்களைக் கூட்டவும் மற்றும் தொடர்பான ஏற்பாடுகளைச் செய்யவும் தமிழ்நாடு முழுவதும், தி.மு.க மற்றும் பா.ம.க.வின் இரண்டாம் கட்டத் தலைவர்கள் ஈடுபட்டதாக பரபரப்பான தகவல்கள் வருகின்றன. திருச்சியில் கொஞ்சம் வெளிப்படையாகவே இது நடந்ததாம். விஜயகாந்துக்கு எதிராக விஜய்யைக் கொம்பு சீவி விடும் தி.மு.க. முயற்சியில் இது ஒரு கட்டம். ஏற்கனவே 'குருவி'யை அமுக்குவது போல தி.மு.க. தரப்பு விஜய்யை வளைத்துப் போட்டு விட்டதாம். தேர்தலின்போது கலைஞர் கரங்களைப் பலப்படுத்துவாராம்விஜய்.

● மீண்டும் பா.ம.க. தங்களிடம் வர வேண்டும் என்று தி.மு.க. விரும்பினாலும், டாக்டருக்குத் துளிக்கூட இஷ்டம் இல்லை என்கிறார்கள். 'இருந்தாலும் பச்சை விளக்கு காட்டுவது போலத் தெரிகிறதே' என்றால், 'ஜெ. உடனடியாக தொடர்புக்கு வர வேண்டும் என்பதால்தான், அதுபோல ஒரு பாவ்லா' என்கிறார் பா.ம.க. புள்ளி ஒருவர். அரசியலில் நவரச நாயகர்கள் அதிகமாகிவிட்டார்கள்.

– ஸ்ரீநி

ஜானகிக்குக் கொஞ்சம் முன்ஜாக்கிரதை அதிகம். துணி அழுக்காவதற்கு முன்பே சோப்பு போட்டுத் துவைக்கிற அளவுக்கு ஜாக்கிரதை. மூத்த மகனுக்கு மூன்று நாளைக்கு முன்புதான் கல்யாணமானது. வந்த மருமகள், வாத்தியார். அம்மா, அம்மா என்று அவள் அன்பாகத்தான் குழம்பு ஊற்றி, ஊறுகாய் வைக்கிறாள். ஆனால் மாமியார் மருமகளுக்குள் சண்டை வர, கொசு குட்டிக்கரணம் அடிக்கிற காரணமே போதும்! அதுதான் அச்சம்! நல்ல மாமியாராக இருக்க விரும்பினாள் ஜானகி.

பக்கத்து வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பாக்கு, வெற்றிலை தின்கிற பல் இல்லாத கௌசல்யா பாட்டிக்கு இரண்டு மருமகள்கள். அந்த வீட்டில் ஒரு சண்டை



எழில் வரதன்

வந்ததில்லை. பாட்டியை இரண்டு மருமகள்களும் அக்கிரமத்துக்கு தூக்கோ தூக்கு என்று தூக்கி, தோளில் போட்டுக் கொண்டு ஆடினார்கள். அந்த சூட்சுமம் என்ன என்பதைத் தெரிந்துகொண்டால் வீட்டில் குதூகலம் கொப்பளிக்கும் என்று நினைத்தாள் ஜானகி.

மாலை நேரத்தில், கால் நீட்டி பாக்கு இடித்துக் கொண்டிருந்த பாட்டியிடம் பம்மிப் பதுங்கிப் போனாள் ஜானகி. பாட்டியிடம் ஒரு சின்ன பிரச்னை. வலது காதில் கொஞ்சம் கோளாறு. இடது காது அறவே கிடையாது. ஜானகியைப் பார்த்ததும் கௌசல்யா பாட்டிக்கு வாயெல்லாம் பல் (இல்லை). ''வா, வா ஜானு... கல்யாணமெல்லாம் நல்லபடியா முடிஞ்சதா? மருமக எப்படி?'' கேட்டுவிட்டு, வீட்டுக்குள் திரும்பி, ''ஏண்டி காய்த்ரீ... அந்த டி.வி.யைக் கொஞ்சம் நிறுத்தேன். காது செவிடாகுது'' என்று கத்தினாள் பாட்டி. உள்ளேயிருந்து, ''கரண்ட் போயி மூணு மணி நேரம் ஆகுது அத்தை!'' என்றாள் காயத்ரி.



''கரண்ட் இல்லையா? ம்... எப்பப்பாரு காதுல பத்து பேரு கத்திக்கிட்டு இருக்கிற மாதிரியே ஒரு யோசனை. எல்லாம் டி.வி.யால வந்தது. நீ உட்காருடியம்மா ஜானகி. ஆமா, உன் மருமக சரியில்லேன்னா சொல்றே! அடப்பாவமே!'' என்று திடீர் பரிதாபத்தைக் காட்டினாள் பாட்டி.

''ஐயோ ஆயா! நான் எப்ப மருமக சரியில்லேன்னு சொன்னேன். வெளக்கம் கேக்க வந்தவளை வெவகாரத்தில மாட்டி விடாதீங்க!''

''பெறகு ஏன் உன் மொகம் பேயறைஞ்சாப்ல இருக்கு! மருமக கடுதண்ணி வெக்கிறாளா? வெளக்கேத்தறாளா? இல்ல பட்டப்பகல்ல மெத்தை போட்டுத் தூங்கறாளா?''

''நீங்க நெனைக்கிற மாதிரி ஒண்ணும் நடக்கலை ஆயா. அது நல்ல பொண்ணுதான். என்ன அம்மா அம்மான்னு சுத்தி வருது. கடைசி வரையில அப்படியே இருக்கணுமே! அதான் பயம். கடைசி வரையில நல்லபடியா இருக்க நீங்கதான் ஒரு யோசனை சொல்லணும்.''

கௌசல்யா பாட்டி வீட்டுக்குள் ரகசியமாய்ப் பார்த்துக்கொண்டு, குரலைச் சன்னமாக்கி சொன்னாள், ''மருமகளை தெய்வமுன்னு நெனைக்காதே. ஒருநாள் இல்லாட்டி ஒருநாள் பழைய சோத்தைச் சூடாக்கி, தக்காளி சோறுன்னு போட்டு

# வைரத்துக்கு ருசி கிடையாது



வெட்டப்பட்ட மரம்
கடத்தப்பட்டது;
சுற்றிக்கொண்டே
நிற்கிறது அனாதையாய்
மரவாசம்!

**- காயாதவன்**

ஏமாத்துவா! தள்ளி விட்டுடு.

உன் மருமகளை வீட்டை விட்டு தொரத்தணும்னு நீ யோசனை கேக்கறதால நான் ஒரே ஒரு வார்த்தை சொல்லுவேன்...''

''ஐயோ ஆயா! நான் மருமகளோட சேர்ந்து வாழணும்னு ஆசைப்படறேன்.''

''அப்படியா? ஆவுற காரியமா? சரி. சொல்றேன். என் அம்மா ஏழு மருமகளோட சாகற வரையில வாழ்ந்த மகராசி. மருமக விசயத்தில எங்கம்மா பயங்கரமான ஆளு. மருமகளைப் பரிசோதனை பண்ணுற அழகே தனி...'' கௌசல்யா பாட்டியின் கண்களில் பழைய காலம் நிழலாடியது. இனி, ஜானகி இல்லையென்றாலும், சுவற்றுப் பல்லிக்காவது கதை சொல்லித்தான் ஓய்வாள் பாட்டி.

''எங்க மூத்த அண்ணனுக்குத்தான் மொத மொத கல்யாணம் ஆச்சு. புது மருமக மொத நாள் வீட்டுக்கு வர்றா. ஆரத்தி எடுக்கிறது எங்க பரம்பரை வழக்கம். அவ படிச்ச மருமகங்கறதுக்காக என் அம்மா பயப்பட மாட்டா! ஆரத்தித் தட்டோட வந்த அம்மா, மருமககிட்ட சொன்னா, 'கிழக்கு பாத்து நில்லுடியம்மா!'ன்னு. என் அம்மாவுக்கு அப்பவே தைரியம் ஜாஸ்தி!

புது ஊர்ல திசை எப்படித் தெரியும்? நடு ஆகாயத்துல வடக்கு தெக்குத் தெரியாம நிக்குது சூரியன். மருமக கேட்டா, 'கிழக்கு எந்தப் பக்கம், அத்தை?'ன்னு. சுத்தி நின்னவங்க எல்லாம் அப்பிடி சிரிச்சாங்க. இத்தினி படிச்ச புள்ளைக்கு வடக்கு தெக்குத் தெரியாமப் போச்சே!

சிரிச்ச ஜனங்கள உஸ்கன்னு சத்தம் போட்டு அடக்கிப்புட்டு, 'சோத்துக் கை பக்கமா திரும்பி நில்லு'ன்னு அம்மா சொன்னாங்க. உடனே மருமக, 'உங்களோட சோத்துக் கை பக்கமாவா, என்னோட சோத்துகை பக்கமாவா?'ன்னு இன்னொரு கேள்வி கேட்டுட்டா.

கையப் பிடிச்சு கிழக்கே திருப்பி ஆரத்தி எடுத்த அம்மா, 'ராகுகாலம் வர்றதுக்கு முன்னாடி காலைக் கும்பிட்டுக்கிட்டு வீட்டுக்குள்ளே வாடியம்மா'ன்னு சொன்னாங்க. எதிர்பார்த்த மாதிரியே, 'யாரோட காலைக் கும்பிடணும் அத்தை?'ன்னு திரும்பவும் கேக்கறா படிச்ச மருமக! அடி சக்கை. மாட்டிக்கிட்டாளா!

அம்மா பளிச்சினு, 'உன்னோட காலைத்தான்! நீயே தொட்டுக் கும்பிட்டுக்கிட்டு வீட்டுக்குள்ள வா!' அப்படீன்னு சொல்லிட்டாங்க. சுத்தி நின்னு சிரிச்சவங்க எல்லாருக்கும் சிரிப்பு அடங்கிப் போச்சு. இதென்ன கூத்து! தன்னோட காலைத் தானே கும்பிட்டுக்கிறதா?

'ஊருக்கு ஒரு தினுசா, வீட்டுக்கு ஒரு தினுசா சாஸ்திரம் சம்பிரதாயம் இருக்கும். எங்க வீட்டு வழக்கத்தை அத்தை சொன்னா, அதை நான் செய்யறேன்'னு சொன்ன மருமக தன் காலைத் தானே கும்பிட்டுக்கிட்டு அப்புறமாத்தான் வீட்டுக்குள்ள நுழைஞ்சா.

அம்மாவுக்கு சந்தோஷத்திலே தலை கால் புரியலை. வீட்டு வழக்கம் கூறுகெட்டத்தனமா இருந்தாலும் வந்த மருமக அதை ஒப்புக்கிட்டு அனுசரிச்சா, அவ ரொம்ப நல்லவன்னு முடிவு பண்ணா. வந்த மருமக ரெண்டாம் நாளே அம்மாகிட்ட கேட்டா ஒரு கேள்வி! 'அத்தே, நம்ம பெரியவங்க ஒவ்வொரு சாஸ்திரத்தையும் யோசிச்சுதான் வெச்சிருப்பாங்க. வீட்டுக்கு வர்ற மருமக தன் காலைத் தொட்டுக் கும்பிட்டுக்கணும்னு ஒரு ஐதிகம் இருக்கே. அதுக்கு அர்த்தம் என்ன?'ன்னு அவ கேட்ட கேள்வியால அம்மா மொகத்தில ஈ ஆடல.

நீ குடும்பப் பொண்ணா, இல்ல துக்கிரியான்னு பரிசோதிக்கத்தான் அப்படி பண்ணேன்னு அவகிட்ட சொல்ல முடியுமா? கோபம் வந்துடாதா? நல்லா யோசிச்சு ஒரு பதில் சொன்னா அம்மா. 'கண்ணு... மருமகன்றவ வீட்டுக்கு வர்ற மகாலட்சுமி மாதிரி! வர்ற மகாலட்சுமிய வீட்டோட எஜமானிதானே கால் கும்பிட்டு வரவேற்கணும். வர்ற மகாலட்சுமி, வீட்டோட எஜமானி ரெண்டுமே நீதானே! அதான் உன் காலை நீயே கும்பிட்டு, உன்னை நீயே ஆசீர்வாதம் பண்ணிக்கிட்டு உள்ள வர்ற மாதிரி ஒரு ஐதிகம் பண்ணியிருக்காங்க பெரியவங்க' அப்படின்னு அம்மா சொன்னதைக் கேட்டு, எங்க மூத்த அண்ணனுக்கு சிரிப்புத் தாங்கலை.''

கௌசல்யா பாட்டி கதையை நிறுத்திவிட்டு வெற்றிலை போட ஆரம்பித்தாள்.

ஜானகிக்கு கிறு கிறுப்பு வந்துவிட்டது. அதற்குள் ரெண்டாவது கதையை ஆரம்பித்தாள் பாட்டி...

''ரெண்டாவது மருமக ஏகமா படிச்சுடவுன்ல வளர்ந்த பொண்ணு. வீட்டுக்கு வந்து அடுப்பு பத்த வெச்ச மகராசி, பூரி, பொங்கல், இட்லி, தோசை இடியாப்பம்னு வீட்டுக்கு ஆகாத பொருளா வடிச்சுக் கொட்ட ஆரம்பிச்சிட்டா. தன்னோட பணக்காரத் திமிரைக் காட்டி, மாமியாரை மட்டந்தட்டத்தான் இப்படி செய்றாளோன்னு அம்மாவுக்குச் சந்தேகம். அம்மா யாருக்கும் அச்சப்படறவ கிடையாது. ஆறாவது நாளே மருமகளைக் கூப்பிட்டா. 'ஏ தேவேந்திரி, நீ இன்னைக்கு ஊயாப்பம் செஞ்சிடு!' அப்படின்னு உத்தரவு போட்டுட்டா. மருமகளும் சரின்னு தலை ஆட்டிட்டு அடுப்படிக்குப் போயிருக்கா!

ஊயாப்பம்னா அவளுக்கு என்ன பண்டம்னு தெரியலை.

அம்மா மருமகளை வேவு பார்த்துக்கிட்டே இருக்காங்க. பொண்ணு அடுப்படிக்குள்ள போயி ரொம்ப நேரம் ஆகுது. ஒரு சட்டி பானை உருளுற சத்தம் கேக்கலே. எட்டிப் பார்த்தாங்க. அங்க மருமக கால் நீட்டிப் போட்டுக்கிட்டு ஒன்னு அழுதுக்கிட்டு இருக்கா. அம்மாவுக்கு ஒரே சந்தோஷம். ஆஹா ஊட்டுக்கு ஏத்த மருமகளா இருக்க முடியலையேன்னு ஒரு பொண்ணு அழுதா, அவ நல்லவளாதான் இருக்கும்னு முடிவு பண்ணறா அம்மா!

அழுது கண்ணைத் தொடைச்ச மருமக அம்மாவைப் பார்த்துக் கேட்டாளே ஒரு கேள்வி! 'அத்தே உங்களுக்கு ஊயாப்பம் செய்யத் தெரியுமா?' அம்மாவுக்கு அந்தக் காலத்திலேயே அறிவு ஜாஸ்தி! 'நீ அழுகாத கண்ணு... நான் பக்குவமா செய்யற



''படத்துல கதையே இல்லியே... ஏன்?''

''வெளில லீக் ஆகிறக்கூடாதுன்னு டைரக்டர் படத்துலகூட கதையைச் சொல்லலை!''

- அம்பை தேவா

முறையை சொல்லறேன். உன் கையால நீயே செய்யி'ன்னு சொன்ன அம்மா ஊயாப்பம் செய்யற பக்குவத்தையும் சொன்னா. சொன்ன பக்குவத்திலே செஞ்சு பாத்தா, கடைசியில சட்டியில உப்புமா இருக்கு! அதைவிட பெரிய கதை நாலாவது மருமக கதை... '' பாட்டி ஆர்வத்தில் வாய் திறக்க, ஜானகிக்குக் கண்ணில் பூச்சி பறந்தது.

''வேணாம் ஆயா! ரெண்டு கதையக் கேட்டே எனக்கு பளபளான்னு எல்லாம் விளங்கிடுச்சு போதும்!''



''தலைவர் என் கோபமாக வெளியே போறார்?''

''அங்கங்க குண்டு வெடிப்பு. கட்சி மீட்டிங்கை தள்ளிப் போடலாம்னு சொன்னதுக்கு அதெல்லாம் 'கூட்டம்' உள்ள இடத்தில்தான்னு... 'கமெண்ட்' அடிச்சாங்களாம்!''

– ஆர்.எஸ். சந்திரசேகரன்

''மாமியார் மருமக ஒத்துமையைப் பள்ளிக்கூடத்தில போயி பாடமா படிக்க முடியாதுன்னு உனக்கு உன் மாமியார் சொல்லித் தரவே இல்லையா? மருமகளைச் சோதிக்கப் பார்க்கற புத்தி என்ன புத்தின்னு கேக்கறேன். உப்பு மாதிரி வைரத்தை வாய்ல போட்டு ருசி பார்க்க முடியுமா நம்மாளே! வைரத்துக்கு ருசியும் கெடையாது. தங்கத்துக்கு மணமும் கெடையாது. அதைப் புரிஞ்சுக்கோ!''

''ஆயா நீங்கதானே காய், கனி, பூ, மாதிரி பரிசோதிச்சு மருமகளை வாங்கணும்னு...''

''அப்படி பண்ணா ஆபத்திலதான் போய் முடியும். இன்னொரு கதையும் கேட்டுக்கோ... எங்க வீட்டுக்கு எதுத்த வீட்டுல ஒரு மாமியாரு இருந்தா. அவளுக்கும் தன் மருமக நல்லவளா, வல்லவளான்னு சோதிக்கப் பாக்க ஆவலு. ஒருநா மருமகளைக் கூப்பிட்டு, 'நீ போய் ஊர் கிணத்தில ஒரு குடம் தண்ணி சேந்திக்கிட்டு வா!'ன்னு மண் குடமும், தகர வாளியும் குடுத்து அனுப்பியிருக்கா. போய்ப் பார்த்தா மண் சட்டியில ஓட்டை. தகர வாளியில அடித்தட்டே இல்லே. சரி, புளியும் களிமண்ணும் வெச்சு அடைச்சு தண்ணி கொண்டாரலாம்னு நெனைச்சு மாமியார் சொன்ன கிணத்தை எட்டிப் பார்த்தா, கிணத்தில சொட்டுத் தண்ணி இல்லே! வந்துச்சு மருமகளுக்குக் கோபம். நேரா வீட்டுக்கு ஓடியாந்து, 'அத்தே, அத்தே! நீங்க குடுத்த மண் குடமும், வாளியும் கிணத்தில விழுந்துடுச்சி'ன்னு ஒப்பாரி வெச்சி அழுதிருக்கா.

'அய்யோ அது புது குடம், புது வாளி ஆச்சே!'ன்னு பதறிட்டு மாமியார் ஓட, பின்னாடியே மருமகளும் ஓடியிருக்கா. ஓடி வந்த மாமியார் கிணத்தை எட்டிப் பார்த்தா...''

''கிணத்துல வாளி இருந்துச்சா?''

''வாளி எப்படி இருக்கும்? கிணத்துல மாமியார்க்காரி அய்யோ அய்யோன்னு கத்திக்கிட்டு இருந்தா'' சொல்லிவிட்டுப் பாட்டி ஓவென்று சிரிக்க, ஜானகி முகத்தில் ஈயாடவில்லை. ஜானகி வந்ததைவிட அதிகமாய்க் குழம்பிப்போய் வீட்டுக்குத் திரும்ப, புதிய மருமகள் ''அத்தை கிழக்குப் பக்கம் எது? விளக்கேத்தணும்?'' என்று சந்தேகம் கேட்டாள். ஜானகிக்கு ஜெகத்ஜோதியாய் எதிர்காலம் தெரிந்தது. அவள் ஆட்டத்துக்குத் தயாராகி, ''சூரியன் உதிப்பது கிழக்கு'' என்று பொத்தாம் பொதுவாய் ஒரு பதில் சொன்னாள். சொன்ன நேரம் இருட்டு நேரம். ●

# பந்தயக்கோழி

**உ**னக்கா... எனக்கா...? என ஒரு வீட்டுக்காக வில்லனும் ஹீரோவும் வீதியில் இறங்கும் 'நீயா... நானா...?' போராட்டம்தான் கதை. காதலும் மோதலுமாகக் கதையை நகர்த்தி கமர்ஷியல் ட்ராக்கில் பயணிக்க வைத்து, சுவாரஸ்யப்படுத்தியிருக்கிறார் இயக்குநர் எம்.ஏ.வேணு. மலையாளத்திலிருந்து, தமிழுக்கு 'டப்'படித்ததில் ஏகத்துக்கும் கேரள வாசனை.

ஹீரோவாக நரேன். காதல் காட்சிகளில் சாதா கோழியாகவும், ஆக்ஷன் காட்சிகளில் சண்டைக் கோழியாகவும் மாறி மாறி நம்மை அசத்துகிறார். 'ஒண்ணு நீ சாகணும்; இல்லை அவன் சாகணும்' என வில்லனுக்கு எதிராக, அவரை கிதா உசுப்பேற்றி விடுகையில் உக்கிரத் தாண்டவம் ஆடுகிறார். ஹீரோயின் பூஜா ஏகத்துக்கு துறுதுறு. அவர் பேயாக வந்து ஹனீபாவையும், நரேனையும் மிரட்டும் காட்சிகளில் காமெடி தோய்ந்த கலகல திகில். பிறகு அவரே காதலியாகையில் காட்சிக்குக் காட்சி நேர்த்தி. ஹனீபா, கதைக்கு ஏற்ற மூடி. காமெடியிலும் கேரக்டர் ரோலிலும் கலந்து கட்டி கலாய்க்கிறார். நல்ல போலீஸாக வந்து கெட்ட போலீஸை நையப் புடைக்கும் போஸ் வெங்கட், வாய் பேசாத ரம்யா நம்பீசன், அண்ணனின் துரோகம் தாளாமல் உருகும் கிதா ஆகியோர் பாத்திரமறிந்து நடித்திருக்கின்றனர். தாதா ராமிரெட்டியின் வில்லத்தனத்தில் ஏகப்பட்ட தெனாவட்டு. ஒவ்வொருமுறையும் ஜோஸ்யக்காரர் சொல் கேட்டு கோதாவில் இறங்குவதில் அந்த கேரக்டருக்கான வீக்னஸ்ஸை வெளிச்சம் போடுகிறார் இயக்குநர். வேணுகோபாலின் கேமரா, இருளும் வெளிச்சமும் இணைந்த டிஜிட்டல் கவிதை. அலெக்ஸ் பாலின் இசையில் அதிரடிகளின் ஆதிக்கம். கனல் கண்ணனின் சண்டைப் பயிற்சியில் அனல் கொஞ்சம் அதிகம். மலையாளத்திலிருந்து தமிழுக்கு வந்திருப்பதால், வசனமும் வாயசைப்பும் தனித்தனி ட்ராக்கில் பயணிக்கிறது. கதையும், காட்சிகளும் கேரளாவிலேயே சுழல்வதால் ஒரு மலையாளப் படம் பார்த்த ஃபீலிங் ஏற்படுகின்றது பந்தயக்கோழி பார்க்கலாம்!

– கபிலன்



18

# யாதுமாகி

## அழகின் வடிவே... அருளின் வடிவே...

இசை, கலை, கல்வி ஆகிய மெல்லுணர்வுகளின் வெளிப்பாடாய் விளங்கும் அம்பிகை; போர், வீரம், வெற்றி போன்ற வன்மையான உணர்வுகள் தோன்றவும் விளங்குகிறாள். கையில் கிளியை ஏந்தியோ வீணையை ஏந்தியோ எழிற்கோலம் காட்டுபவள், பயங்கரமான ஆயுதங்கள் ஏந்தியும் காட்சி தருகிறாள். முன்னது நல்லவற்றைப் பேணிக்காக்கும் வடிவம் என்றால், பின்னது தீயதை அழிக்கும் கோலம். அத்தகைய கோலங்களுள் ஒன்றுதான் காளியின் கோலம்.

பழந்தமிழர் காளியை, கொற்றவை என்ற பேரில் வழிபட்டு வந்திருக்கிறார்கள். சங்க இலக்கியங்கள் காளியை, பாலை நிலத்தின் தெய்வமாகப் பேசுகின்றன. அரசர்களுக்கிடையே அடிக்கடி நிகழ்ந்த போர்களின் காரணமாக, போர்க்குணம் நிரம்பிய வீரர்களின் தெய்வமாகவும் விளங்கியவள் காளி.

காளி என்னும் சொல் 'காலி' என்ற வடசொல்லின் திரிபு. கரிய நிறம் கொண்டவள் என்று இதற்குப் பொருள். காலங்களின் அதிதேவதையாக விளங்குவதாலும் இவன் 'காலி' என்று பெயர் பெற்றாள். வடநாட்டில், குறிப்பாக வங்கதேசத்தில் பெரிதும் வழிபடப் பெறும் இவள், அங்குள்ள காளி கோயில்களில் மிகப் பயங்கரமான தோற்றத்துடன் எழுந்தருளியிருக்கிறாள். நிர்வாணக் கோலத்தில், வெட்டுண்ட கைகளைக் கோத்து அரையில் அணிந்தவளாய், மண்டை ஓடுகளால் ஆன மாலையை அணிந்து, விரிந்த கூந்தலும் கோரைப் பற்களும் தொங்கிய நாக்கும் மருட்டும் விழிகளும் முக்கண்ணியுமாகத் திகழும் இவள், கைகளில் பெரிய கொடுவாளையும் வெட்டுண்ட தலையையும் ஏந்தி நிற்கிறாள். இவள் காலடியில் சிவபெருமான் மிதியுண்டு கிடக்கிறார். இந்தக் கோலத்தோடு ஒப்பிடுகையில், தென்னாட்டுக் காளியின் வடிவம் சாந்த வடிவம் என்றே சொல்லலாம்.

சோழர் கால செப்புப் படிமங்களில் காளி பல்வேறு கோலங்களில் காட்சி தருகிறாள். நின்றகோலத்திலும், அமர்ந்த கோலத்திலும், அசுரனை வதம் செய்யும் கோலத்திலும், நடனமாடும் கோலத்திலும் காளியின் விக்ரகங்கள் இன்று காணக் கிடைக்கின்றன. இவை மிகத் தொன்மையான வடிவங்கள்.

சதுரமான உயர்ந்த பீடத்தில் இடது காலை மடித்து, வலது காலைத் தொங்க விட்டவாறு, வீராசனத்தில் கம்பீரமாகக் காட்சி தரும் காளியின் செப்புச் சிலை ஒன்று, சென்னை அருங்காட்சியகத்தில் இருக்கிறது. இது திருவெண்காடு என்னும் தலத்தில் கண்டெடுக்கப்பட்டது என்றும், கி.பி. 10ம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும் அருங்காட்சியகக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. நிமிர்ந்த முகமும் நேர்கொண்ட பார்வையுமாய், தோற்றத்தில் ஓர் உறுதியும் செருக்கும் தொனிக்கும் வீர வடிவம். முகவாயை நிமிர்த்தி, தலையை உயர்த்தி அவள் பார்க்கும் பார்வையிலேயே, 'யாரடா அங்கே?' என்று அதட்டிக் கேட்கும் அதிகாரத் தோரணை விளங்குகிறது.

# நின்றாய காளி

த.கி. நீலகண்டன்

அஞ்சத்தக்க கோர வடிவம் இல்லா விட்டாலும், மரியாதையை வரவழைக்கும் கம்பீரமான வடிவம். நான்கு திருக்கரங்களு டன் திகழும் இவள், மேற்கரங்களில் சூலமும் பாசமும் விளங்க, கீழ்க்கரங் களில் இடது கரத்தில் கபாலத்தை ஏந்தி, வலது கரத்தை அபயமுத்திரையில் வைத் திருக்கிறாள். அஞ்சேல் என்று அபயகரம் நீட்டுவதற்கு இணங்க, முகபாவமும் சாந்த மாகவே இருக்கிறது. திருமுடியில், சிலிர்த் தெழுந்து செங்குத்தாக விறைத்து நிற்கும் செஞ்சடையையே, ஜ்வாலா மகுடமாக (தீ நாக்குகள் போல) அணிந்திருக்கிறாள். அந்த முடிக்கற்றையில் மண்டை ஓடு, ஊமத்தை மலரோடு பாம்புக் குட்டி களையும் சூடியிருக்கிறாள். மார் பில் முப்புரிநூலுக்குப் பதிலாக மண்டை ஓட்டு மாலையைச் சூடி, ஒரு காதில் பனை ஓலைச் சுருளையும், இன்னொரு காதில் மனிதப் பிரேதம் ஒன்றையும்(?) தோடாக அணிந்து காட்சி தருகிறாள்.

'நிசும்ப சூதனி' என்று குறிப்பிடப் பெறும் இன்னொரு காளி வடிவமும் அருங்காட்சியகத்தில் இருக்கிறது. எட்டுத் திருக்கரங்கள். வலது கரங்களில் ஒன்றில் குத்துவதற்காக உயர்த்தி ஓங்கிய சூலமும், மற்ற கைகளில் கத்தி, உலக்கை, வாள் ஆகியவற்றையும் ஏந்தி யிருக்கிறாள். இடது கரங்களில் பாம்பு, கேடயம், மணி, கபாலம் ஆகி யவை விளங்குகின்றன. வலது காலைக் குத்திட்டு மடித்து, பாதத்தை அமர்ந்திருக் கும் பீடத்தின் மீதே வைத்து, இடது காலைத் தொங்கவிட்டவாறு வீற்றிருக் கிறாள் இந்தத் தேவி. காலடியில் வீழ்ந்து



❋ கோல விழி அம்மன் கோவிலில் உள்ள திருவடிவம்

கிடக்கும் அசுரனின் வடிவம்! உடலின் இருபுறமும் விரிந்திருக்கும் கைகளும், உயர்த்திய தோளும், நிமிர்ந்து உயர்ந்த இடையும், ஆற்றலையும் செயல்திறத்தையும் வெளிக்காட்டும் உயிரோவியமாய் இச்சிலையை ஆக்கிவிடுகிறது. திருவாசியிலும், விரிசடையிலும் அணியாபரணங்களிலும் அழகிய வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. இந்தச் செப்புச் சிலையின் கல்வடிவமே இன்று மயிலைக் கோலவிழி அம்மன் கோயிலில் கருவறையில் உள்ள வடிவம்.

இந்தக் கோலவிழி அம்மன் கோயிலில் ஓர் அபூர்வமான செப்புச் சிலையும் இருக்கிறது. நடனமாடும் கோலத்தில் விளங்கும் காளியின் வடிவம் இது. மிகத் தொன்மை வாய்ந்த விக்ரகம்! சுமார் ஒன்றரை முழ உயரத்தில், நுணுக்கமான வேலைப்பாடுகள் அமைந்தது. இதுபோன்ற வடிவம் வேறு எங்கும் காணக் கிடைக்கிறதா என்பது சந்தேகமே! சதுர தாண்டவம் என்னும் தாண்டவக் கோலத்தில் (பாதங்களைச் சேர்த்து வைத்து, முழந்தாள்களை அகல விரித்தாடும் கோலம் சதுர தாண்டவக் கோலம்) நான்கு திருக்கரங்களுடன் விளங்கும் இந்த வடிவம், ஓர் அரிய கலைப் பொக்கிஷம். அந்தக் கோயில் வளாகத்தில் புதைந்திருந்து கிடைத்ததாம்!

வலது மேல்கரம் உடுக்கை ஒன்றை ஒலித்த வண்ணம் இருக்க, வலது கீழ்க் கரம் சிம்மகர்ண முத்திரையுடன் விளங்குகிறது. இடது கீழ்க்கரம் நடராஜப் பெருமானின் வீசிய கரம் போல டோலஹஸ்தமாகத் திகழ, இடது மேல்கரம் பதாக முத்திரை எனும் நடன முத்திரையைக் காட்டுகிறது. விரல்களில் அப்படியொரு நளினமும் நுணுக்கமும் தெரிகின்றன. வாழைப்பூவின் மடல்களுக்குள் இருக்கும் அமைப்பைப் போல மெல்லிக மெல்லிசாய் கைவிரல்கள், சிறுத்த இடை, நிமிர்ந்த முகம், சிரிக்கும் உதடுகள். புன்னகை பூக்கும் திருவதனம். ஆடை ஆபரணங்களில் கலைஞனின் கைவண்ணம் பொலிகிறது. மார்பகத்தில் பாம்புகளால் ஆன நாகக் கச்சம். சிரசில் கேச மகுடம். பிடரியில் சுருட்டை சுருட்டையாகப் பின்னிப் பிரிந்து இழையும் கேசபாரம். கேசமகுடத்துக்கு அழகுசேர்க்கும் சிரஸ் சக்கரம் என்னும் அமைப்பு! மார்பில் தவழும் மண்டை ஓட்டு மாலை பூணூலாகவும், உத்தரீயமாகவும் விளங்குகிறது. காதுகளில் ஒன்றில் பனை ஓலைத் தோடும் இன்னொன்றில் முன்பு கண்டதைப் போல் பிரேதமும் தொங்குகின்றன. இந்தப் பிணத் தோடு எதனால் வந்தது? இதன் தத்துவப் பின்னணி என்ன? என்பது விளங்கவில்லை. காலதத்துவத்தை விளக்கும் உருவம் என்பதால், இந்த உருவகமா என்று புரியவில்லை! சிதம்பரத்தில் உள்ள தில்லையம்மன் கோயிலில் பிரம்ம சாமுண்டி என்ற பெயரில் காளி, பிரேதத்தையே ஆஸனமாகக் கொண்டு அமர்ந்திருக்கிறாள். இங்கு அதைத் தோடாக அணிந்து விளங்குவதன் பின்னணி என்ன? தெரிந்தால் சொல்லுங்களேன்!?

**போர்க்குணம் நிரம்பிய வீரர்களின் தெய்வமாக விளங்கியவள் காளி**

நன்றி : **கோலவிழி அம்மன் கோயில் அர்ச்சகர் திரு. தனசேகர்**

நடனகாளி புகைப்படம் : **அசோக் கிருஷ்ணசாமி**

# நூலிழையில் வண்ண ரேகை

**ஆம்; நம்மால் முடியும்! வைகோ, விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 600 002. ரூ. 120.00**

அமெரிக்கத் தேர்தலில் வெற்றி பெற்றுள்ள பாரக் ஒபாமாவின் முழக்கம் 'ஆம்; நம்மால் முடியும்'. அதனைத் தலைப்பாகக் கொண்டு வெளிவந்துள்ள நூல். அமெரிக்க வாழ் கறுப்பர்களின் போராட்டங்களை, துயரங்களை, தடைகளைத் தாண்டி அவர்களை முன்னழைத்துச் சென்ற நிகழ்வுகளை விவரிக்கிறது. ஆபூர்வமான புகைப்படங்களும், தொடர்புடைய பெட்டிச் செய்திகளும் கலங்க வைக்கின்றன. கறுப்பின மக்களின் வரலாற்றை மீள்பார்வை செய்ய இது சரியான நேரம்தான்.

**என்னுடன் ஒருநாள், புவனகிரி கல்யாண், கல்யாண் பதிப்பகம், 75/15, பாளையக்காரத் தெரு, புவனகிரி - 608 601. ரூ.80.00**

தம் பயணங்களால், தமது தொழில்களால், தாம் சந்தித்த மனிதர்களால் கிடைத்த அனுபவங்களை எளிய நடையில் கதைகளாகத் தந்துள்ளார் ஆசிரியர். பல்வேறு தளங்களில் பயணிக்கும் 23 கதைகள் தொகுக்கப்பட்டுள்ள நூல். இயல்பான நிகழ்வுகளை நூலிழையில் ஆடும் வண்ணரேகையாகப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.




**உடல்நலமும் மன மகிழ்வும், ஜே.பி.வாஸ்வானி, கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தியாகராய நகர், சென்னை - 600 017. ரூ.60.00**

மனநலம், எண்ணங்கள் போன்றவை உடல்நலத்தோடு நெருங்கிய தொடர்பிலிருப்பதை எடுத்துக் காட்டும் கட்டுரைகள். நேர்மறைச் சிந்தனைகள், நகைச்சுவை உணர்வு, உடல் இயக்கம் குறித்த கவனம் போன்றவை சார்ந்த 20 கட்டுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. உடல்நலமும் மனநலமும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதை விளக்கிச் செல்கையில், நம்மைக் குறித்த சுய மதிப்பீட்டுக்கான தேவையை உணர்த்துகிறது இந்நூல்.

– நேயமுகில்

"ஆசை வெச்சேன் உம்மேல -
அரளி வெச்சேன் கொல்லையிலே
ஆசை வெச்சா நல்லதய்யா - இல்ல
அரளி வெத உள்ளதய்யா''-ன்னு
காதலிக்காவிட்டால் அரளியின்
ஆதரவை நாட



# ஆசை வெச்சேன்... அரளி மேல!

வேண்டியிருக்குமென்கிற கிராமியம் பூசிய இப்பாடலைக் கேட்டிருக்கக்கூடும். மரணத்தோடு தொடர்புடைய அரளி இப்போது வாழ்வுக்கு வரமளிக்கத் துவங்கி விட்டது. அரளி அதிர்ஷ்டத்தை அள்ளிக்கொடுத்து குபேர அந்தஸ்துடன் பல குடும்பங்களை ஆதரித்து வருகிறது என்பதுதான் கிராம யதார்த்தம்.

இதற்கு உதாரண பூமியாகத் திகழ்வது...

சேலம் மாவட்டம், பனைமரத்துப்பட்டியில் மலை அடிவாரத்தை ஒட்டியுள்ள வெள்ளாமைத் தோட்டம். மஞ்சள், தென்னை, கரும்பு எனப் பணப் பயிர்களுக்கு மத்தியில், மணம் தரும் குணப் பயிராகப் பூத்திருக்கிறது அரளித் தோட்டம்.

தோட்டத்துல ஒரு தடவை அரளி பயிரிட்ட விவசாயி, தொடர்ந்து பத்துப் பதினைந்து வருஷத்துக்குக் கவலையில்லாமல் இருக்கலாம். அரளி தொடர்ந்து பதினைந்து வருடங்கள் மகசூல் தந்து வரும். மாற்றுப் பயிருக்குப் போய்விட்டு, திரும்பவும் அரளிக்கே வந்து விடலாம்.

விஷத் தன்மையுள்ளதால் எந்த ஆடு மாடும் மேயாது. வேலி போட வேண்டிய அவசியமில்லை. மற்ற பயிரைப் போல தண்ணீர் அதிகம் தேவைப்படாது. வருஷத்துக்கு நாலு தடவை களை எடுத்து, மூணு தடவை உரமிட்டு, பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை தண்ணீர் விட்டால் போதும்.

இந்த அரளி மலரை விவசாயம் செய்யும் பனைமரத்துப்பட்டி தேவகி

பாலச்சந்திரன் தனது அனுபவத்தைப் பகிர்ந்துகொண்ட போது சொல்கிறார்.

''அரளிப் பூக்கள் வெள்ளை, மஞ்சள், சிவப்புன்னு பல வண்ணங்கள்ல இருக்கு. நான் போட்டிருக்கறது ரோஸ் அரளி. ஒரு கிலோ பூ பறிக்க பத்து ரூபா கூலி. ஒரு மணி நேரத்துல மூணு நாலு கிலோ அரளி பறிக்கலாம். பண்டிகைக் காலங்கள் அதாவது கோயில் திருவிழா, அமாவாசை, பௌர்ணமி, பிரதோஷம் போன்ற நாட்கள்ல ஒரு கிலோ அரளி நூறு ரூபாயிலேர்ந்து நூத்தைம்பது ரூபா வரைக்கும் மார்க்கெட்ல ஏலம் போகும். சாதா நாட்கள்ல ஐம்பது ரூபாய்க்குக் கூடப் போகும். எப்படி வெச்சாலும் ஒரு ஏக்கர் அரளி விவசாயிக்கு, வருஷம் ஒண்ணுக்கு கொறைஞ்சது ஒரு லட்ச ரூபாய் லாபம் அள்ளித் தந்திடும்!

ஒரு செடியில அரளி மொக்காக இருக்கும்போதே பறிச்சுடணும். இதுக்காகத்தான் பொழுது விடியறதுக்கு முன்னாடியே அரளியப் பறிச்சுடுவாங்க. அரளி மொக்குகள பாலிதீன் பாக்கெட்ல போட்டுக் கட்டிட்டா, ரெண்டு நாள் வரைக்கும் தாங்கும். மத்தப் பூக்கள் தாங்காது. பெங்களூர், நெல்லூர், சென்னைன்னு முக்கியமான நகரங்களுக்கு அனுப்பறோம்.

செடி வளரத் துவங்கிய ஆறு மாசத்துல பூ பிடிக்க ஆரம்பிக்கும். அங்கொண்ணும் இங்கொண்ணுமா சுமாரா பூ பூக்கும். மனசு தளர்ந்துடக்கூடாது. குச்சி நட்ட ஒரு வருஷம் கழிச்சு, அபாரமா அரளி பூக்க ஆரம்பிச்சுடும். விவசாயிங்க அதிகாலைத் தூக்கத்தைத் தொலைச்சுடும். பூ பறிக்கறதுல பல நேக் இருக்குது. கண்ணசந்து தூங்கிட்டாப் போச்சு. நம்பளக் கவலைப்பட வெச்சுடும். அரளியைப் பொறுத்தவரை காப்பாத்தி வந்தோமுன்னா, வருஷா வருஷம் நம்ப குடும்பத்துச் செலவுகளை அது காப்பாத்தி வுட்டுடும். எந்த வருஷமும் நொந்து போகாம விவசாயிகளப் பார்த்துக்கும்!'' எனக் கூறுகிறார் அவர்.

காற்றில் பரவும் மலரின் மணம் போல, மலர் விவசாயம் மண்ணெல்லாம் பரவ ஆரம்பிக்கிறது மகிழ்ச்சியாய்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**''ஒரு ஏக்கர்ல அரளி விவசாயம்னா... குறைச்சலா ஒரு லட்சம் லாபம் பாக்கெட்ல!''**

* தேவகி பாலச்சந்திரன்

**தெ**ன் ஆப்பிரிக்கா துயரில் மூழ்கிக் கிடக்கிறது. மம்மா என்று ஆப்பிரிக்கர்களால் ப்ரியமாக அழைக்கப்பட்ட மிரியம் மெக்கேபா என்னும் போராளிப் பறவை, தன் சங்கீதத்தைத் துறந்து மரணத்தின் மடியில் வீழ்ந்துவிட்டது. கடந்த வாரம் (10.11.08) திங்கள் அன்று அதிகாலை இத்தாலியில் ஒரு மேடைப்பாடல் பாடி முடித்து வரும்போது, அவரின் உயிர் பிரிந்தது. ராபர்ட் சாவியனோ என்னும் எழுத்தாளரை (இவருக்கு அவ்வப்போது கொலை மிரட்டல்கள் வந்த வண்ணம் இருக்குமாம். ஏனெனில் அவர் எழுதத் துணிந்தது அரசியல்; அதன் குற்றம் குறைகள்.) ஆதரித்து, இத்தாலியின் மாஃபியா ஆட்சியை வன்மையாகக் கண்டித்துப் பாடினார். மேடையிலிருந்து இறங்கும்போது அவருக்குத் திடீரென்று நெஞ்சுவலி ஏற்பட்டது. மருத்துவமனைக்கு அழைத்துச் சென்ற சில நொடிகளிலேயே உயிர் இழந்தார். அவருக்கு 76 வயதாகியிருந்தது.

தென் ஆப்பிரிக்கக் கானக் குயில் மெக்கேபா, நெல்சன் மண்டேலாவுடன் இணைந்து அடையாளம் காணப்பட்டார். தன் பாடல்களால் நாட்டின் அராஜக ஆட்சியை எதிர்த்துத் தன் எதிர்வினையைக் காண்பித்து, அப்பாடல்கள் வாயிலாக கறுப்பர்களின் சுதந்திரக் குரலை எட்டுத் திக்கிலும் ஒலிக்கச் செய்தார் மம்மா.

முடக்கு வாதத்தால் அவர் கால்கள் முடங்கியிருந்தாலும், வயோதிகம் அவர் பார்வையின் ஒளியை இழக்கச் செய்திருந்தாலும், நியாயத்துக்கும் உரிமைக்குமான அவரின் குரல் தன் வலிமையை என்றும் இழந்ததில்லை. சாகும்வரை தன் பாடல்கள் மூலம் உண்மைக்கும் நியாயத்துக்கும் போராடியவர்.

வலியும் வேதனையும் நிறைந்த கறுப்பின மக்களது துயரின் ஒட்டுமொத்தக் குரலாக மெக்கேபாவின் குரல், தென் ஆப்பிரிக்காவில் ஒலித்ததின் எதிரொலியாக நெல்சன் மண்டேலா சிறையிலிருந்து 1990-ல் விடுவிக்கப்பட்டார்.

**அ**ரசாங்கம் மெக்கேபாவின் பாஸ்போர்ட்டை 1960லேயே பறிமுதல் செய்துவிட்டது. முப்பத்தியொரு ஆண்டுகள் நாடு கடத்தப்பட்ட மெக்கேபா, ஃப்ரான்ஸ், பெல்ஜியம், ஜெனிவா, அமெரிக்கா என்று புலம் பெயர்ந்து தன் இருத்தலை அர்த்தப்படுத்திக் கொண்டிருந்தார். அமெரிக்காவில் சுற்றிக்கொண்டிருந்த போது அவரது தாயார் இறந்த செய்தியறிந்து வரத் துடித்தபோதும், தாயின் இறுதிச் சடங்கில் கலந்து கொள்ளக்கூட அனுமதியில்லாமல் போய்விட்டது. நிறவெறியை எதிர்த்த அவரது பாடல்கள் தென் ஆப்பிரிக்க வானொலி மற்றும் தொலைக்காட்சியில் 1976ஆம் ஆண்டு



● மரியம் மெக்கேபா

தடை செய்யப்பட்டன.

''என் வீட்டுக்கே நான் வர முடியாதபடி எவ்விதக் கொலைபாதகச் செயலையும் நான் செய்துவிடவில்லையே... பின் ஏன் இப்படி?'' என்று உணர்ச்சிவசப்பட்டுச் சொல்லியிருக்கிறார். அவர் நினைவுப்பாதையின் ஊடே பயணிக்கையில் இவ்வாறு எழுதியுள்ளார்: 'என் கலாச்சாரம் என்னுடனே இருக்கிறது. இசையே என் உயிராய் இருக்கிறது. அது வேறு நான் வேறு அல்ல. என்னையும் அறியாமல் இசையினூடே பல இதயங்களும் நுழைந்து, ஒட்டு மொத்த ஆப்பிரிக்கர்களின் ஒரே குரலாக நான் உருவெடுத்துவிட்டேன்.'

சமீபத்தில் ஒரு பேட்டியில் அவர் கூறியிருந்தார். ''நான் புரட்சிப் பாடகியல்ல. எனக்கு அந்த வார்த்தையின் அர்த்தங்கள் தெரியாது. தென் ஆப்பிரிக்காவில் என்ன நடக்கிறது என்பதை உலகுக்கு அறிவிக்கவே, நான் தேர்ந்

## மண்டேலாவின் அஞ்சலி

**'தெ**ன் ஆப்ரிக்காவின் தாய்' என்று நெல்சன் மண்டேலா மரியம் மெக்கேபாவைக் குறிப்பிடுகிறார். தன் குரல் வழியே ஒரு தேசத்தின் துயரைச் சுமந்த இந்த நூற்றாண்டின் ஆகச் சிறந்த பாடகியாக அவரைப் போற்றுகிறார். ''எங்களின் போராட்டங்களுக்குத் தம் அன்பின் குரலாகவும் அன்னையாகவும் இருந்தவர். அவர் எங்களுக்குப் புதிய தேசமாகவே இருந்தவர்.''



* நெல்சன் மண்டேலா

# கடைசிப் பாடல்

தெடுத்த பாடல்களைத் திட்டமிட்டுப் பாடுகிறேன் என்று மக்கள் தவறாக நினைத்துவிட்டார்கள். அப்படி அல்ல! நான் என் வாழ்க்கையைத்தான் பாட வந்தேன். அதுவும் தென் ஆப்பிரிக்காவில் நாங்கள் எப்போதும் எங்கள் பாடுகளையே எங்களுக்கு நடந்தவற்றையே எங்களைக் காயப்படுத்தும் விஷயங்களையே இசையின் மூலமாகச் சொல்லி வருகிறோம். அவ்வளவே!''

மெக்கேபாவின் இசை நம்பிக்கையின் விதைகளைத் தூவியது. பல இளம் பெண்களை இசை வல்லுனர்களாய் உருவாக்கினார்.

தென் ஆப்பிரிக்க அரசாங்கம் அவரது மறைவுக்காகத் துக்கம் காத்தது. வெளிநாட்டு உறவு அமைச்சரான நிகோ சானா தலாம்னி சூமா இவர் மறைவு பற்றிக் கூறியது: 'நம் காலத்தின் மிகச் சிறந்த பாடகியின் அற்புதக் குரல் நிரந்தரமாக ஓய்ந்துவிட்டது'.

செய்தித் தொகுப்பு,
தமிழ் வடிவம்: **உமா ஷக்தி**

வழக்கம் போல இன்னைக்கு ஒரு ஆஃபீஸ். ஆஃபீஸ்ல நாலஞ்சு பேரு உட்கார்ந்திருந்தாங்க...

வெள்ளையும் சொள்ளையுமாய்... ஒருவன் வந்து கேட்டான்.

''யாருங்க... ராம்கி...?''

''நான்தான்'' என்றேன்.

''உங்களை சார்... கூப்பிடறாருங்க...''

நான் உள்ளே சென்றேன். புரொடியூசர் சாவதானமாக உட்கார்ந்திருந்தார்.

''வாங்க தம்பி... சுகமாயிருக்கிங்களா? நீங்க 'காயத்ரி'ல வேலை பார்த்தவுக தானே...?''

''ஆமா... சார்.''

''உங்க டைரக்டர் உங்களைப் பத்தி சொல்லியிருக்காரு. சரி... எந்த மாதிரி கதை வச்சிருக்கிக. அப்புறம் உங்க டைரக்டர் மாதிரி ஒரு லட்சம், இரண்டு லட்சம்ன்னு ஃபிலிம் சாப்பிட மாட்டீங்களே...?''

தர்மசங்கடமாக, ''இல்ல சார்'' என்றேன்.

''சரி... யாருக்குக் கதை பண்ணி வச்சிருக்கிக...''

''யாருக்கும் இல்ல சார். நியூ ஃபேஸா போட்டு பண்ணலாம்ன்னு...''

''வெளங்கிடுச்சு போ! தம்பி... எவன் கதையைப் பார்த்துத் தியேட்டர்க்குள்ள வர்றான்கிற.''

''இல்ல... சார்... புதுவசந்தம் மாதிரி ஒரு வித்தியாசமான கதை சார்... ஓப்பனிங் மட்டும் கேளுங்களேன்...''

''நாம நாலு காசு போடறதே நாலு காசு சம்பாதிக்கத்தானே தம்பி... என்ன சொல்றீக...?''

மந்திரித்த ஆடு மாதிரி தலையாட்டினேன்.

''உங்களைக் கூப்பிட்டதே... இன்னைக்கு நம்பர் ஒன் ஸ்டார் பிரேம்குமார் கிட்ட அஞ்சு லட்சம் அட்வான்ஸ் கொடுத்து கிட்டத்தட்ட மூணு வருஷம் ஆகப் போவுது... நீங்களும், அவரும் வாடா... போடான்னு சொல்ற அளவு ஃப்ரண்ட்ஸாமே... போங்க போய் அவரு கிட்ட கால்ஷீட் வாங்கிட்டு வாங்க... உடனே பூஜையைப் போட்டுரலாம். என்ன சொல்றீக...?''

''இல்ல சார்... பிரேமுக்கு இந்தக் கதை சூட் ஆகாது... இது கொஞ்சம் யூத் சப்ஜெக்ட்.''

''அட... என்ன தம்பி... போன படத்தில கூட அவரு காலேஜ் போயிட்டிருக்காரு. நீங்க என்னடான்னா...? போங்க... போய் கதையை பிரேமுக்கு ஏத்த மாதிரி பண்ணிக்கிட்டுப் போய் அவரை அசத்திட்டு வாங்க...'' என்றபடி ''எலேய் எசக்கி...'' என்று வெளியே குரல்கொடுக்க...

# ஹீரோவெல்லாம்

என்னுடன் அவர் செலவழித்த நேரம் முடிந்து விட்டது என்பதை உணர்ந்து, எழுந்து வணங்கிவிட்டு வெளியேறினேன்.

நண்பன் பரிதியின் அறைக்குப் போனேன்.

''என்னடா ஆச்சு..?'' என்றான். விஷயத்தைச் சொன்னேன்.

''நானும் அதைத்தான் ஆரம்பத்திலேருந்து சொல்றேன்.''

''அது சரிடா பரிதி... நம்ம கதைல எப்படி பிரேமை நுழைக்கறது....?''

''என்னடா... வசந்த் கேரக்டருக்கு பிரேமை அப்படியே மேட்ச் பண்ணு... எங்களை மாதிரி பத்திரிகைக்காரங்கதான் அது நொட்டை இது நொட்டைன்னு எழுதுவோம்... நீ கமர்ஷியலா படம் பண்

ணனும்னு நினைச்சுட்டு இதெல்லாம் யோசிக்காதேடா...''

''அதுக்கில்லடா... இப்ப அவன் ரேஞ்ச் என்ன...?''

''என்ன ரேஞ்ச்? நீதானே தமிழ்ல முதல் முதலா டயலாக் சொல்லிக் கொடுத்தது... ஒரே சிகரெட்டை மாத்தி மாத்தி அடிப்பீங்க... அதெல்லாம் மறந்துட மாட்டான்டா... போடா போய் பிரேமை கதையைச் சொல்லிக் கவுத்திட்டு வா, போ.. வீட்டுச் செலவுக்குக் காசு ஏதும் வேணுமா...?'' என்று பதிலுக்குக் காத்திருக்காமல்... என் சட்டைப்



# ஹீரோவா?

பையில் ஐம்பது ரூபாய்த் தாளைத் திணித்தான்.

இது ஒரு வழக்கமான செயல் என்பதால், பேசாமல் வாங்கிக் கொண்டேன்.

**த**ரையில் பெட்ஷீட்டை விரித்து பேண்டைத் தேய்த்துக்கொண்டே மனைவி புலம்பிக் கொண்டிருந்தாள்.

''ஸ்கூல் வாத்தியார் வேலைல இருந்தீங்க... வேலையை விட்டுட்டு சினிமாவுக்கு வந்தீங்க... இன்னும் எத்தனை வருஷம்தான் நானும் கஷ்டப்படறது... அடுத்த மாசம் ஸ்கூல் ஃபீஸ் கட்டணும். வீட்டு வாடகை கொடுத்து அஞ்சு மாசமாச்சு...''

''ஆத்தா காலங்கார்த்தால புலம்ப ஆரம்பிக்காதே... புள்ளைங்க முழிச்சுக்கப் போவுது...''

''ஆமா... புள்ளைங்களைப் பத்திக் கவலைப்படறீங்களாக்கும்... அதுங்களுக்கு சாயந்தரம் ஆச்சுன்னா மூணு ரூபா பிஸ்கட் வாங்கிக் கொடுக்க முடியலை... திரும்ப வேலைக்குப் போங்க...''

''ஏய்... பத்து வருஷம்டீ இந்த உழைப்பு... கண்டிப்பா படம் பண்ணிடுவேன்...''

''ஆமா தனியா முயற்சி பண்ண ஆரம்பிச்சு ஒரு வருஷம் ஆகப் போகுது. பாருங்க... அப்படி இல்லைன்னா உங்க டைரக்டர்கிட்டயே வேலைக்குப் போங்க...''

''பார்க்கிறேன்... கவிதா'' என்றவனிடம்,

''இந்தாங்க பேண்ட்... அப்படியே சாமியைக்

**நவீன்**



''டைட்டில்ல தலைமை தாதான்னு போடு றாங்களே... என்ன?''

''தியேட்டர்ல பிரச்னை இல்லாம படத்த ஓட்டுறதுக்குத்தான்!''

- பி.ஜி.பி. இசக்கி

கும்பிட்டுட்டுப் போங்க...'' என்றாள்.

அந்தத் தெருவில் திரும்பியதுமே... பிரேம் வீடு இருக்கும் தெரு என்பது தெரிந்தது. சமீபத்தில் நடந்து முடிந்திருந்த பிரேமின் பிறந்த நாளுக்கு ஒட்டப்பட்டிருந்த வாழ்த்து போஸ்டர்கள் கிழிக்கப்படாமலேயே இருந்தன.

வாட்ச்மேன் என்னை மேலும் கீழும் பார்த்துவிட்டு, என் பேர் கேட்டு இண்டர்காமில் கூப்பிட்டு ஏதோ கேட்க... பின்... என்னைப் பார்த்து, ''உள்ளே போங்க'' என்றான்.

அந்தப் பிரம்மாண்டமான பங்களாவின் உள்ளே மெதுவாக நுழைந்தேன். ஒருவன் வழிநடத்த...

ஹாலில் அமர்ந்தேன். சுற்றிலும் விதம் விதமான கேடயங்கள்.

குறுகிய காலத்துக்குள் பிரேமுக்கு நிறைய ரசிகர்கள்... அப்புறம் தொடர்ச்சியாக ஆறு படமும் சூப்பர் ஹிட்... கேட்க வேண்டுமா என்ன...?

தமிழ்நாட்டுச் சிங்கம் என்று எவனோ ஒரு ரசிகன் வாழ்த்து அனுப்பியிருந்ததைப் பார்த்ததும்,

இதே பிரேம்... தமிழ் டயலாக் சரியாக வராத காரணத்துக்கு டைரக்டரிடம் திட்டு வாங்கியது நினைவுக்கு வர சிரிப்பு வந்தது.

''வாங்க ராம்கி'' என்ற குரல் கேட்டு, தன் நிலைக்கு வந்தேன். சோபாவை விட்டு எழுந்தேன்.

''உட்காருங்க ராம்கி... நல்லாருக்கீங்களா...? பார்த்து ரொம்ப நாளாச்சு. இன்னும் டைரக்டர்கிட்டதான் இருக்கீங்களா...?''

''ஆமா... பிரேம்...''

''ம்... சார் என்ன பண்றார்...?'' என்றபடி ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டே என்னிடமும் ஒரு சிகரெட்டை நீட்டினான்.

''வேணாம் பிரேம்...'' அவன் அறிமுகமான புதிதில்... ஒரே சாதா சிகரெட்டை மாற்றி மாற்றி அடித்ததை அனாவசியமாக ஞாபகப்படுத்திக் கொண்டேன்.

''அப்புறம் என்ன விஷயம் ராம்கி...?''

''அண்ணாச்சிகிட்ட கதை சொல்லப் போனேன்... அவரு உன்கிட்ட டேட்ஸ் வாங்கிக்கிட்டு வரச் சொன்னாரு... அதான்...''

''இல்ல ராம்கி... நான் இப்போதைக்கு புது டைரக்டர் யாருக்கும் படம் பண்றதில்லை...''

இந்த நிராகரிப்பை எதிர்பாராத நான் கோபமாகவே...

''இன்னிக்கு நீ... இந்த அளவுக்கு இருக்கேன்னா... ஒரு புது டைரக்டர்னாலதானே... அதுவுமில்லாம நாம ஒண்ணு மண்ணா திரிஞ்சப்ப... என்ன பேசிக்கிட்டோம்...?'' என்றேன்.

''நான் எதையும் மறக்கல ராமகிருஷ்ணன். நாலு வருஷம் எந்த சான்ஸும் இல்லாம... டப்பிங் பேசினது கூட மறக்கலை...

ஆனா... இப்ப இருக்கற இந்த நம்பர் ஒன் ஸ்தானம் இருக்கு பாரு... இந்தப் பொஸிஷனுக்கு வர்றதுக்கு நான் இழந்தது அதிகம்...''

''அதுக்கு ஒட்டுமொத்தமா புது டைரக்டர்ஸ் வேணாங்கிறது ரொம்பத் தப்பு பிரேம்... அட்லீஸ்ட் அவங்ககிட்ட கதை கேளு... அப்புறமா கூட பிடிக்கலைன்னு ரிஜக்ட் பண்ணு...''

''இல்ல ராம்கி... எனக்குப் பயம் வந்திருச்சு... அதான்... கமர்ஷியலா பெரிய டைரக்டர்ஸ்கூட மட்டும்தான் படம் பண்றேன்... நீங்க ஃபர்ஸ்ட் ஒரு படம் பண்ணுங்க... இரண்டாவது படம் நான் கண்டிப்பா பண்றேன்...''

''ஓகே... தேங்க்யூ... ஸார்'' என்று எழுந்தேன்.

அவனும்... கைகொடுத்தபடி ''ஆல் தி பெஸ்ட்...'' என்றான்.

**சி**ல நாட்களுக்குப் பிறகு...

என் டைரக்டர் ஆபீஸுக்குள் நுழைந்தேன்.

என்னைப் பார்த்ததும், ''வாங்க டைரக்டர் ஸார்...'' என்று அழைத்தார் டைரக்டர்.

நான் சங்கோஜமாக நெளிந்தேன்.

''அடுத்த படத்துக்கு யார் கதையை செலக்ட் பண்ணியிருக்கேன் தெரியுமா...?''

யோசனையுடன் நிமிர்ந்து பார்த்தேன்.

''அட... கையைக் கொடுய்யா... உன் கதையைத்தான் ஓ.கே. பண்ணியிருக்கேன்...''

சந்தோஷத்தில் என் கண்களில் கண்ணீர் திக்குமுக்காடியது.

''உனக்கொண்ணும் அப்ஜெக்ஷன் இல்லையே...?''

''என்ன சார்... என் கதையை நீங்க டைரக்ட் பண்றதுக்கு நானில்ல சார் கொடுத்து வச்சிருக்கணும்...''

''போ... போய்... தேஜா பிலிம்ஸ்ல போய் உன் அட்வான்ஸ் செக்கை வாங்கிக்க... ஒரே நேரத்தில தமிழ், தெலுங்குன்னு இரண்டு லேங்குவேஜ்ல பண்றோம்ய்யா...? யார் ஹீரோ தெரியுமா...?

நம்ம பிரேம்ய்யா... முழுசா ஆறு மாசம் டேட்ஸ் கொடுத்திருக்கான்ய்யா... பய... பழசை மறக்கலைய்யா...''

அதிர்ச்சியுடன் டைரக்டரைப் பார்த்தேன்.

''சார்... பிரேமா... ஹீரோ?''

''அட... ஆமாய்யா... உன் கதை அவனுக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சாம்...''

''இல்ல... சார்... பிரேமுக்கு என் கதையைக் கொடுக்கமாட்டேன் சார்... என் கதைக்கு ஏற்ற ஹீரோ அவரில்லே...''

''என்னய்யா சொல்ற...? லெட்சுமி வீடு தேடி வந்திருக்கா...''

''ப்ளீஸ்... என்னைய மன்னிச்சுடுங்க... ஸார்'' என்று கையெடுத்துக் கும்பிட்டு விட்டு வெளியே வந்தேன். 'வேறு வேலை ஏதேனும் தேடலாமா?' என்ற யோசனை சட்டெனத் தோன்றி மறைந்தது. ●



''வயிற்று வலி ரெடியா?''

''வாய்க் கொழுப்பு ஜாஸ்தி உங்களுக்கு! சமையல் ரெடியானு கேட்டால் என்ன?''

– உ. ராஜாஜி

''மெகா தொடர்களில் வரும் பெண்கள் அழுது வடிகிறார்கள் என்ற குற்றச்சாட்டு இயக்குநர்கள் முன்பு வைக்கப்படுகின்றது... இக்குற்றச்சாட்டு தேவையற்றது'' என்று பேசத் துவங்குகிறார் 'திருமதி செல்வம்' தொடரின் இயக்குநர் குமரன். ''இல்லத்தின் ஆணி வேரே பெண்கள்தான். ஆதிகாலம் முதல் இன்றுவரை ஆண்களைவிடப் பெண்களே அதிகம் பிரச்னைகளைச் சந்திக்கிறார்கள். பிரச்னைகளின் வடிவம் மட்டும்தான் மாறியுள்ளது'' என்று யதார்த்தத்தைச் சொல்லும் குமரன்...

''மதியம் ஒளிபரப்பாகிக்கொண்டிருந்த இத்தொடர், ரசிகர்களின் ஏகோபித்த வரவேற்பைப் பெற்றபின்பு, ப்ரைம் டைமான இரவு நேரத்தில் ஒளிபரப்பாகிறது. இந்த வெற்றிக்கு நான் தேர்வு செய்த கதைக் களமும், என் குழுவின் உழைப்பும்தான் காரணம்.



இந்தத் தொடரில் வரும் கதாபாத்திரங்களில் பெரும்பான்மையானவை நான் வாழ்க்கையில் சந்தித்த நபர்களின் பிம்பங்கள்தான். குறிப்பாக கதாநாயகி, கதாநாயகன் கேரக்டர்களை என் தாய், தந்தையை மனத்தில் வைத்துதான் உருவாக்கினேன்.

இன்றைய காலகட்டத்தில் நமது நாட்டில் திருமணங்கள் வியாபாரமயமாக்கப்பட்டு வருகின்றன. கழுத்து நிறைய சவரன்களை அணிந்து வரும் பெண்ணை மாப்பிள்ளை வீட்டாரும், பை நிறைய

# பெண்தான்

வெளிநாட்டில் சம்பாதிக்கும் மாப்பிள்ளையை பெண் வீட்டாரும் எதிர்பார்க்கின்றனர். திருமணம் என்பது பண்டமாற்று முறையல்ல. அன்பை வெளிப்படுத்த, ஏற்படுத்த உண்டாக்கப்பட்ட வைபவம். இந்தத் தொடரின் மூலம் இதை உணர்த்த முயற்சிக்கிறேன்.

திருமதி செல்வத்தில் வரும் ஆண்கள், விட்டுக்கொடுக்க வேண்டிய நேரத்தில் விட்டுக்கொடுக்கவும், தட்டிக் கேட்க வேண்டிய நேரத்தில் தட்டிக் கேட்கவும் செய்வார்கள்.

பல துறைகளில் இன்று இந்தியப் பெண்கள் சாதனை புரிந்தாலும், இல்லத்தில் மனைவி, சகோதரி, மகள் என்ற உறவுகளில் பின்னிப் பிணைந்திருக்கிறார்கள். இந்த உறவுகளுக்கான பொறுப்புகளைப் பெண்கள் சரியாக உணர்ந்து செய்யும்போதுதான், சமூகத்தில் அவர்களுக்கான உரிய அங்கீகாரம் கிடைக்கிறது. மேலும் தாய் தன் மகனிடம் காட்டும் அன்பையும்,

மனைவி தன் கணவனிடம் காட்டும் பரிவையும் ஒவ்வொரு ஆணும் சமூகத்தில் பிரதிபலிக்கிறான். எனவே குடும்பத்தின் முகவரிகளாகப் பெண்களைச் சித்திரிப்பது மிக அவசியமானது. என்னுடைய இந்தக் கருத்து சரியானது என்பதால்தான் 'திருமதி செல்வம்' வெற்றி பெற்றுள்ளது'' என, தன் வெற்றியின் ரகசியம் சொல்லி முடித்தார் இயக்குநர் குமரன்.



# ஃபேமிலியின் அட்ரஸ்!

''சினிமா வாய்ப்பு குறைந்ததால் சீரியலுக்கு வந்து விட்டீர்களா?'' என்று இத்தொடரின் நாயகி அபிதாவிடம் கேட்கையில்,

''சினிமாவைவிட சீரியலில் நடிப்பது சௌகரியமானது. ஆஃபீஸ் செல்வது போல ஷூட்டிங்குக்கு காலை கிளம்பிச் சென்று, மாலை திரும்பி விடலாம். சினிமாவைப் போன்று அவுட்டோர் கிடையாது. 'சேது'வுக்கு பிறகு திருமதி செல்வத்தில் நல்ல கேரக்டர் கிடைத்திருக்கிறது. இத்தொடரில் இன்ஜினியர் என்று நம்பித் திருமணம் செய்த பின்புதான், தன் கணவன் மெக்கானிக் என்று கதாநாயகிக்குத் தெரிகிறது. ஏமாற்றத்தை நுட்பமாக நடிப்பின் மூலம் வெளிப்படுத்தி எனது திறனை நிரூபிக்க இத்தொடரில் வாய்ப்பு கிடைத்தது. யதார்த்தமான வாழ்க்கையைப் பிரதிபலிப்பதால் இத்தொடருக்கும் எனக்கும் நல்ல வரவேற்பு கிடைத்திருக்கிறது. இத்தொடரின் வெற்றிக்கு மற்றுமொரு காரணம் தாய் - மகளுக்கிடையேயான பாசப்பிணைப்பு. மகளின் வாழ்க்கையில் தாயின் பங்களிப்பு என்பது ஒவ்வொரு' கட்டத்திலும் இன்றியமையாதது. மகளாக நான் இதை உணர்ந்திருப்பதால் அந்த உணர்வை இந்தக் கேரக்டர் மூலம் நன்றாக வெளிப்படுத்த முடிந்தது.

சமீபத்தில் ஷூட்டிங்குக்காக ஒரு கோயிலுக்குச் சென்றிருந்தேன். அங்கே வந்த ஒரு பெண்மணி என் கையைப் பிடித்துக்கொண்டு, 'என் மகளைக் கஷ்டப்பட்டு வளர்த்து திருமணம் செய்து வைத்தேன். இன்று என்னைத் திரும்பிக்கூட பார்ப்பதில்லை. உன்னைப் போல ஒரு பெண் இருந்தால் எனக்கு இந்த நிலைமை வந்திருக்காது' என்று அழுதபடி கூறினார். இப்படி நிறைய தாய்மார்கள் இந்த சீரியலைப் பார்த்தபிறகு என்னை அவர்கள் வீட்டு மகளாக எண்ணுவதை நினைக்கும்போது பெருமையாக இருக்கிறது. இந்தப் பெருமையை எனக்கு டி.வி தொடர்தானே கொடுத்தது'' என சிலாகித்துச் சொல்கிறார் அபிதா.

– ராகவ்குமார்

* குமரன்



**தத்வாஸனா, தத்வமயீ** என்று அடுத்தடுத்து வரும். தத்வாஸனா - தத்துவங்களைத் தனக்கு ஆஸனமாகக் கொண்டு அமர்ந்திருப்பவள்.

**தத்வமயீ** என்பதை **தத்-த்வம்-அயி** என்று மூன்று பதங்களாகப் பிரிக்க வேண்டும். **தத் பத லக்ஷ்யார்த்தா** என்ற நாமத்தை அனுபவிக்கிறபோது, தத் என்கிற பதத்துக்கு என்ன அர்த்தம் என்பதைப் பார்த்தோம். த்வம் - என்கிற சப்தம் 'அம்மா, நீதான்' என்கிற பொருள்பட அமைகிறது. 'எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருக்கக்கூடியவள் என்றால் அது நீதான்' என்று ஒரே ஒருத்தரைப் பார்த்துத் தான் சொல்ல முடியும் - அந்த ஒருத்தரை (அம்பாளைச்) சொல்லி அழைக்கிற கள்' என்பார்கள்!

ஆகவே **நி: ஸீமமஹிமா** என்கிற போது, அவளுடைய மஹிமைக்கு எல்லை இல்லை என்று பொருள்.

**நித்யயௌவனா** - என்றைக்கும் இளமையோடு இருக்கக்கூடியவள்.

**மதசாலினி** - மதம் என்கிற வார்த்தைக்கு, 'எந்தவிதமான வடிவமும் இல்லாத ஞானம்' என்று ஒரு பொருள் உண்டு. வடிவத்தையெல்லாம் தாண்டியது. எப்படி 'நிர்வாணம்' என்றால் வடிவம் அற்றது என்று பொருளோ அப்படியே மதம் என்பதற்கும் வடிவம் இல்லாதது என்று பொருள். **மதசாலினி**- வடிவமற்ற முழு ஞானத்தின் - மெய்ஞானத்தின் - பொருளாக இருக்கக் கூடியவள்.

# த்ருப்தியின் உறைவிடம்

விளிச் சப்தம்தான் அயி. 'நீயே சகலத்துக்கும் ஆதாரமாக இருக்கிறாய்!' என்பது பொருள்.

**நி: ஸீமமஹிமா** - எந்த விதமான எல்லையும் இல்லாதவள். அவளுடைய மஹிமைக்கும் பரிபாவத்துக்கும் எல்லை கிடையாது.

சீமை என்றால் எல்லை என்று அர்த்தம். அந்தக் காலத்தில் 'திருநெல்வேலிச் சீமை' என்று நெல்லைப் பகுதியை அழைத்தார்கள். தென்னிந்தியாவின் எல்லையில் அப்பகுதி அமைந்திருக்கிறது. அதற்குப் பிறகு கடல்தான். சீமைக்குப் போகிறார்கள் என்று சொன்னால், கடலைத் தாண்டிப் போகிறார்கள் என்று பொருள். வெளிநாடு போய் வந்தவர்களை, 'சீமைக்குப் போய் வந்தவர்

## கௌலாசார நாமங்கள்

இதற்குப் பிறகு வரக்கூடிய பல நாமங்கள், அம்பாளைக் கௌலாசார முறையில் வழிபடுகின்ற நாமங்கள்: **குசலா, கோமலாகாரா, குருகுல்லா, குலேச்வரி.**

**குலேச்வரி** என்பதை இரண்டு மூன்று விதமாகப் பிரிக்கலாம். குலத்தினுடைய ஈசுவரி. குலம் என்றால் வழி வழியாக வரக்கூடிய மரபு.

'எங்களுடைய வழி வழி மரபு என்பது என்ன? அம்மா! உன்னிடமிருந்துதான் அந்த மரபு தோன்றியிருக்கிறது' என்று அர்த்தம்.

ஆழ்வார் பாடுகிறபோது 'எந்தைக்குத் தந்தை தந்தை தம் மூத்தப்பன் தொடங்கி

ஆட்செய்கின்றோம்' என்று பாடினார். அந்த மாதிரி எங்கள் குலத்துக்குத் தலைவியாக இருக்கக்கூடியவள் குலேச்வரி என்றும் ஓர் அர்த்தம் சொல்லலாம்.

கௌலாசார முறையில் வழிபடப்படக்கூடியவள்; அதற்கான ஆராதனைக்கு உரியவள் என்பதால் **குலேச்வரி** (கௌலேசுவரி) என்றும் பொருள் கொள்ளலாம்.



***குல குண்டாலயா*** - அவளுடைய ஆலயம் எது? குல குண்டம். குண்ட என்பது குண்டலினியைக் குறிக்கிறது. சுருண்டு கிடக்கும் குண்டலினியை அவளது ஆலயமாகக் கொண்டவள்.

***கௌல மார்க தத்பர ஸேவிதா*** - கௌல மார்கத்தில் வழிபடக்கூடியவர்களால் ஸேவிக்கப்படக் கூடியவள்.

***குமார கண நாதாம்பா*** - குமாரக் கடவுளுக்கும் கணநாதருக்கும் தாயாக இருக்கக்கூடியவள்.

## ஏழு குணங்கள்

இதற்கப்புறம் வரக்கூடிய 27 திருநாமங்கள், அம்பாளுடைய குண விசேஷங்களைச் சொல்கின்றன. ***துஷ்டி:, புஷ்டி:, மதி:, த்ருதி:, சாந்தி:, ஸ்வஸ்தி மதீ, காந்தி:*** - இந்த ஏழு திருநாமங்களும் ஏழு குணங்களை விவரிக்கின்றன.

***துஷ்டி:*** என்றால் மனத் திருப்தி. திருப்தி வந்தால்தான் சந்தோஷம். எப்போதும் திருப்தியாக - ஆனந்தத்தில் இருக்கக்கூடியவள் அம்பாள்.

ஆனந்தம் வரவேண்டுமென்றால் முதலில் திருப்தி வேண்டும். திருப்தி வராவிட்டால் சந்தோஷம் வராது; ஆனந்தம் வராது. சந்தோஷத்துக்கான எந்தப் பொருளைக் கொண்டு வந்து வைத்தாலும், ''எல்லாம் சரிதான். எனக்கு ரொம்பப் பிடித்த நிறம்தான். இருந்தாலும் இந்த நிறத்தில் ஒரு துளி 'ஷேட்' மாறியிருந்தால் ரொம்ப நன்றாக இருந்திருக்கும்'' என்று சாதாரண விஷயத்திலேயே சொல்கிறோமா இல்லையா! அந்தத் திருப்தி வரவில்லையானால், எவ்வளவுதான் பொன்னையும் பொருளையும் கொண்டு வந்து கொட்டினாலும் சந்தோஷம் வராதே!

இந்த மாதிரி அதிருப்திகளுக்கே இடமற்ற, முழுமையான திருப்தியுடன் கூடிய ஆனந்தத் தன்மைக்கு உரியவள் ***துஷ்டி:***

***புஷ்டி:*** - இது செழுமையைக் குறிக்கும். குழந்தை நல்ல புஷ்டியாக இருக்கிறது என்று சொல்கிறோமில்லையா! அதுவே அம்பாளுடைய குணம் - அந்தச் செழுமையை எல்லோருக்கும் தரக்கூடியவள் என்பதாலும் புஷ்டி.

***மதி:*** - ஞானம், அறிவு. அதுவே

அவளுடைய தன்மை. எல்லாவற்றையும் உணரக்கூடிய ஞானம். கிருதக்ஞா, சர்வக்ஞா என்று சொல்கிறோமே, அந்த சர்வக்ஞாவாக கிருதக்ஞாவாக எல்லா வற்றையும் உணரக்கூடிய ஞானம் படைத்த வளாக, எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட ஞானம் படைத்தவளாக இருப்பவள்.

**த்ருதி:** - தைரியலக்ஷ்மியாக தைரியத் தைத் தன்னிடத்திலே தேக்கிக் கொண் டிருப்பவள்.

**சாந்தி:** - அமைதியைத் தரக்கூடியவள். தானே சாந்த ஸ்வரூபிணியாகத் திகழ் பவள்.

**ஸ்வஸ்தி மதீ** - அழகு, சௌந்தர்யம் நிரம்பியவள்.

**காந்தி:** - தேஜஸ் (தெய்வீக ஒளி) பொருந்தியவள். காந்திமதி என்றே அவ ளுக்கு ஒரு திருநாமம் உண்டு.

- இப்படி ஏழு குணங்களின் ஸாகர மாக இருக்கக்கூடியவள்.

**நந்தினி** - நந்தகோபருடைய மகள் நந் தினி என்பது ஒரு பொருள். கம்ஸன் சிறை வைக்க, அங்கே வசுதேவர் - தேவகிக்குப் பிறந்த எட்டாவது குழந்தை (கண்ணன்) இரவோடு இரவாக கோகுலத்துக்கு இடம் மாற்றப்பட்டது அல்லவா? அங்கே, கோகு லத்தில் யசோதை - நந்தகோபனுக்குப் பிறந்த பெண் குழந்தை சிறைக்குக் கொண்டுவரப்பட்டது. கம்ஸன் அந்தப் பெண்குழந்தையைக் கொல்ல முயன்ற போது, அந்த மஹாமாயா பறந்து போய்விட்டாள் என்று ஒரு கதை உண்டு- ஸ்ரீமத் பாகவதத்தில் கிருஷ்ணாவதாரத்தில் வரும் கதை.

கம்ஸன் கையிலேயிருந்து விடுபட்டுப் பறக்கிறபோது அந்தப் பெண்குழந்தை, ''நான் யாரென்று நினைத்தாய்! உன்னை அடிக்கக்கூடியவன் வந்து பிறந்தாயிற்று!'' என்று எச்சரிக்கை பண்ணிவிட்டுப் போகும்!

இவ்வாறு நந்தகோபனின் திருமகளாக மஹாமாயா அவதாரம் செய்ததால் அம்பா ளுக்கு நந்தினி என்று பெயர். 'பத்மநாப சகோதரி', 'ஷ்யாம கிருஷ்ண சகோதரி' என் றும் அழைக்கப்படுகிறவள் - கிருஷ்ணா வதாரத்தில் கண்ணனுக்குச் சகோதரியாக அவதாரம் செய்ததால்.

**நந்தினி** என்ற வார்த்தைக்கு இன்னொரு அர்த்தமும் உண்டு - நல்லனவற்றையெல் லாம் தருபவள் நந்தினி. அதனால்தான் காம தேனு பசுவினுடைய மகளுக்கு நந்தினி என்று பெயர். மன்னன் திலீபன், இந்த நந் தினி பசுவைப் பராமரிப்பதற்காகவென்றே ஆட்சிக் கட்டிலையும் துறந்து தன் மனைவி யோடு வெளியேறினான். அவன் அப்படிப் பராமரித்து வந்ததனால்தான் ரகு வம்சம் தோன்றியதாக காளிதாஸர் சொல்லுவார். (இதில் காளிதாஸருக்கும் வால்மீகிக்கும் சிறிது வேறுபாடு உண்டு.) ஆக, ஒரு வம் சத்தின் தொடக்கத்துக்குக் காரணம் நந்தினி பசு. காமதேனுவைப் போல், கல்பக விரு க்ஷத்தைப்போல் நல்லனவற்றையெல்லாம் தரக்கூடியது நந்தினி பசு. நந்தினியான அம் பிகையும் அதைப் போல் நமக்கு நல்லன வற்றையெல்லாம் தரக்கூடியவள்.

தேஜஸ் (தெய்வீக ஒளி) பொருந்தியவள். காந்திமதி என்றே அவளுக்கு ஒரு திருநாமம் உண்டு.

*(வளரும்)*

"அது என்ன? ஆன்னா... ஊன்னா... உடனே ஒரு மஞ்சள் பையத் தூக்கிக்கிட்டு ஸ்ட்ரெய்ட்டா சென்னைல வந்து எறங்கிடு தீங்க?"ன்னு நடிகர் விவேக் கேட்ட மாதிரி சென்னை தலைமைச் செயலகத்தில் அன்று அந்தப் பெண்மணியைப் பார்த்த போது யாரும் கேட்டிருக்க முடியாது. வேலை தேடியோ உதவி நாடியோ கோட்டைக்கு வந்தவர் அல்ல அவர். நீதி கேட்டு வந்திருந்தார் அந்தக் கொங்கு மங்கை.

ஈரோடு மாவட்டம், பெருந்துறையில் கடந்த நான்கு மாதங்களாக நீடித்து வரும் சர்ச்சை. விவசாயி பழனிச்சாமி, அவரது மனைவி மலர்விழி, மகன் சிவபாலன், இவர்களது பூர்விகச் சொத்தில் ஒரு பகுதி யான ஆறு ஏக்கர் இடத்தை அபகரித்து ஆள் கடத்தல் வழக்கில் சிக்கிய, கைத்தறித் துறை அமைச்சர் ராஜா, அதிரடியாக அமைச்சர் பதவியிலிருந்து நீக்கம் செய்யப் பட்டார். சொத்து அபகரிப்பு மற்றும் ஆள் கடத்தல் வழக்கு சி.பி.சி.ஐ.டி. விசாரணை யில் உள்ளது. இந்நிலையில் மேற்கண்ட வழக்குகளில் சிக்கியுள்ள முன்னாள் அமைச்சர் ராஜாவை, சட்டமன்ற உறுப்பி னர் பதவியிலிருந்தும் தகுதி நீக்கம் செய்ய வேண்டுமெனக்கோரி, தமிழக சபாநாயகரி டம் (அவரது உதவியாளர் வசம்) மனு அளித்துள்ளார் மலர்விழி.

"எங்களுக்கு ஏற்பட்ட பாதரவு தமிழ் நாட்டுல யாருக்கும் நேர்ந்துடக் கூடாது. அதுக்கு எச்சரிக்கை மணி அடிக்கத்தான், துணிப்பையத் தூக்கிக்கிட்டு அலைஞ்ச வண்ணமா இருக்கேன். எனக்கு வயசு நாப்பத்தெட்டு. பெருந்துறையில நா படிச் சது பழைய எஸ்.எஸ்.எல்.சி. ஸ்கூல வுட்டு நின்னதும் சொந்தத்தில என்னியக் கட்டிக் குடுத்தாங்க. என் கணவர் இந்த மண் ணோட கடும் உழைப்பாளி. எங்க குடும் பம், அவுக தம்பி குடும்பம், மாமனார் குடும்பம் எல்லாமே பக்கத்துப் பக்கத்துல வீடு கட்டி இதே தோட்டத்துல ஒண்ணாத் தான் இருக்கோம்.

வீடு, தோட்டம் எல்லாம் சேர்த்து எங்க பூர்விக சொத்து நிலம்! இருபத்தியோரு ஏக்கர். அதுல ஆறு ஏக்கராவ அபகரிக்க முயற்சி பண்ணி, மிரட்டி உருட்டி எங்கள்ட்ட கையெழுத்து வாங்கிட்டு, நானு, எம் புருசன், எங்க மகன் சிவபாலன் மூணு பேரையும் அடியாட்கள் துணை யோடு பலவந்தமா கடத்திட்டுப் போய்ட் டாரு ராஜா. எங்க ரெண்டு பேரை விடு விச்சவங்க, எம் மகனை விடலை. உயர்நீதி



✱ மலர்விழி

மன்றத்துல ஆட்கொணர்வு மனு போட்டு, அதன் மூலமா கொண்டாந்து நிக்க வெச்ச எங்க மகன், அதுக்கப்புறம் இந்த மூணு மாசமா எங்க கண்ல தென்படவே இல்ல. இப்பவும் அவன் எங்கன இருக்கான்னு தெரியல.

வீடுகள் எல்லாத்தையும் இடிச்சுத் தரை மட்டம் பண்ணிட்டாங்க. வரிசையா ரூம் மாதிரி பத்து வீடு... வாடகைக்கு விட்டிருந் தோம். எல்லாம் குளோஸ். எங்க வீடுங்க இருந்ததுக்கான அடையாளமே அங்கன இல்ல. கடத்தல்லேர்ந்து விடுபட்டு தெய் வாதீனமா உயிரோட நானும் எம் புருசனும் திரும்பி வந்து இந்த மண்ணுல நின்னப்ப, நாங்க கட்டியிருந்த உடுப்புத் துணி மட்டும் தான் மிச்சம். தண்ணி மொண்டு குடிக்க ஒரு செம்பு கூட இங்க இல்ல.

நல்லா வெளஞ்ச இருநூற்றி நாற்பத்தி யாறு தென்னை மரங்கள வெட்டி அதுங்க இருந்த தூரு அடையாளம் கூட தெரியாத படி பொக்லைன் புல்டோசர் வுட்டு நிர விட்டாங்க. பசு மாடுகள், கன்றுகள் என பதினாறு உருப்படிகள். அதையும் ஓட்டிட் டுப் போய்ட்டாங்க. கால்நடைகள்ல நாலு உருப்படிகளை இப்ப திரும்ப ஒப்படைச் சிருக்கு சி.பி.சி.ஐ.டி.

எங்க மகனை உயிரோட எங்கள்ட்ட ஒப்படைக்க வேணும்னு திரும்பவும் இப்ப சென்னை உயர்நீதிமன்றத்துல ஹேபியஸ் கார்பஸ் மனு செய்ய இருக் கோம். எங்களுக்கு ஏற்பட்ட இந்தக் கொடூரம்தான், என்னிய துணிப்பைய தூக்கிக்கிட்டு கோட்டை வரைக்கும் வந்து போக வெச்சுடுச்சு.

எனக்கு தெய்வ நம்பிக்கை அதிகம். அந்த ஆதிபராசக்திதான் எனக்கு இவ்வளவு துணிச்சலைத் தந்திருக்கு. எங்களோட நில அபகரிப்பு பிரச்னையில எங்களுக்கு நியா யம் கிடைக்கற வரைக்கும் தொடர்ந்து போராடுவேன்!'' எனக் கண்கள் பனிக்கக் கூறுகிறார் மலர்விழி.

செய்தி, சித்திரம் : **புதியவன்**

# சின்ன துணிப்பையும் நிறைய துணிச்சலும்...



# "முன்னோர்களைத்

* விருபாக்ஷா கோயில்

**"பயணங்கள் பண இருப்புக்குச் செலவு என்றாலும் அறிவின் தேடலுக்கும், கற்பனையின் நீட்சிக்கும், நினைவுகளின் சுகமான அசைபோடுதலுக்கும் எப்பொழுதுமே வரவுதான்" என்று சொல்லும் எழுத்தாளர் வே.எழிலரசு, தமது ஹம்பி பயண அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார்...**

"வரலாற்றின் எழுத்துக்களை - காலங்கள் கடந்தும் சாட்சியமாய் வைத்திருக்கும் இடங்கள்- நமக்குக் கற்றுக் கொடுக்கவே காத்திருக்கின்றன.

பெங்களூரிலிருந்து இரவு 10.30 மணிக்குப் புறப்படும் ஹம்பி எக்ஸ்பிரஸ்ஸில் ஏறிப் படுத்தால், காலை 7.30க்கு ஹொஸ்பெட்டில் இறங்கியாக வேண்டும். ஹொஸ்பெட்டில் தங்கி ஹம்பியைச் சுற்றிப் பார்க்கலாம். ஆர்வம் உள்ளவர்களுக்கு குறைந்தபட்சம் இரண்டு நாட்கள் தேவைப்படும் அளவுக்கு, நிறைய வரலாற்று ஞாபகங்கள் உள்ளன.

ஹம்பி - அப்படி ஓர் இடம். ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்னால் தென்னிந்தியாவின் அரசியல் மற்றும் கலாசார தலைநகராக இருந்தது-



* கல் தேர்

கிருஷ்ண தேவராயர் ஆண்டு வந்தார். யானைகளின் பிளிறல்களும், குதிரைகளின் குளம்படியோசைகளும் சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் ஒலித்துக் கொண்டேயிருந்த இடம். ஆயுதங்களின் உற்பத்திச் சாலைகளும் அறிஞர்களின் தர்க்க மண்டபங்களும் இடிந்து சிதிலமாகி, கண்களைக் காயமாக்குகின்றன.

போகும் தடமெல்லாம் செழித்து வளர்ந்திருக்கும் வேளாண்மை உற்பத்தி, என்றும் அழிவில்லாதது எதுவென நமக்கு உணர்த்தி, பார்வைக்கு மருந்து போடுகின்றது. துங்கபத்ரா நதியின் நீர் தரும் கொடையினால் ஹம்பியின் சுற்றுப்புறக் கிராமங்கள் வளம் கொஞ்ச, வந்தாரை வரவேற்றுத் தலையசைக்கின்றன.

ஹம்பியில் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் கலைச் சின்னங்களில் பிரதானமானது விருபாக்ஷா கோயில். இந்தக் கோயிலின் கோபுர நிழல் அடித்தளத்தில் விழுவது இல்லை என்பது திராவிடக் கட்டிடக் கலையின் பெருமைக்குச் சான்று.

காட்டும் பாறைகள்.

பூமியின் பரப்புக்குக் கீழே அமைந்திருக்கும் சுரங்கக் கோயில். அதில் சின்னதாக மொட்டவிழக் காத்திருக்கும் அரும்பு போல லிங்கம்.

சினம் கொண்ட சிங்கத்தின் அழகிய கலை வெளிப்பாடாய் உக்கிர நரசிம்ம சிற்பம். புறப்படத் தயாராக நிற்பது போல் தோற்ற மயக்கம் தரும் 'கல் தேர்.'

சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய தாமரை மஹல். 'கம்பீரமாகவும் விசாலமாகவும் பரந்திருக்கும் 'யானை

# தரிசித்தேன்!"



❋ யானை கொட்டடி

பிரதான கோபுரத்தின் தலைகீழ் வடிவம், காமிரா லென்சில் குமிழ் வடிவ ஆடியில் பிரதிபலிப்பது போல, கோயிலின் உட்புறச் சுரங்க அறையில் பிரதிபலிப்பது - தவறவிடக்கூடாத காட்சி.

சிற்பிகளுக்கு வேலை வைக்காமல் இயற்கையே தன் கரத்தில் ஒளி ஏந்தியதோ என்பது போல அங்கங்கே மலைக்காட்சிகள்.

அதில் முக்கியமானது 'அக்கா தங்கை பாறை'. இரட்டைச் சகோதரிகள் போல ஒட்டி மானுட உரு



❋ வே. எழிலரசு



* புஷ்கரணி குளம்



* கல் தட்டு

கொட்டடி'. உயர்ந்து நிற்கும் 'கண்காணிப்பு கோபுரம்'. சிற்பங்களையே தோரணங்களாக்கிய 'விட்டல கோயில்'. நதியினில் முழங்காலைத் தொங்கவிட்டு ரிலாக்ஸ்டாக காட்சி தருவது போல துங்கபத்ரா ஓரம் புரந்தா தாசர் மண்டபம்.

அரவத்தை அரை ஞாண் கயிறாய் வயிற்றில் முடிச்சிட்டு பிரம்மாண்டமாய் காட்சி தரும் கணபதி சிற்பம். புஷ்கரணி எனப்படும் - அழகிய படிகளுடன் அமைந்த தண்ணீர்க்குளம்.

ஹரிஹரர், புக்கர் - என்னும் வீரமிக்க இரண்டு சகோதரர்களால் உருவாக்கப்பட்ட விஜயநகரப் பேரரசு (1336-1565) 1565-ல் எரியூட்டப்பட்டு நிர்மூலமாக்கப்பட்டது. தக்காணப் பீடபூமியின் சுல்தான்கள் ஒன்று சேர்ந்து, விஜயநகரப் பேரரசை அழித்தார்கள் என்று வரலாறு சொல்கிறது. ஆனால் வெளிப்பகை மட்டுமே ஒரு வலிமை மிகுந்த ராஜ்ஜியத்தை வீழ்த்திவிட முடியுமா? - என்பதுதான், எழுதப்பட்ட வரலாற்றில் வினவாமல் விடப்பட்ட பெருங்கேள்வி.

அரச பாரம்பர்யத்தில் பிறக்காமல் போனாலும் வீரமும் விவேகமும் துணை நிற்க, தன்னெழுச்சி கொண்ட இளைஞர்கள் ஓர் அரசைக் கட்டியெழுப்ப முடிகிறது எனில், அவர்களின் அமைப்பை ஏற்று அணி திரண்டதில், எளிய மக்களின் பங்களிப்பும் இருந்திருக்க வேண்டும். காரணம், அந்நிய ஆட்சியில் நிகழ்த்தப்பட்ட பொருளாதார சுரண்டல்களும், கலாசார ஒடுக்குமுறைகளும்தான்.

நீர்ப்பாசனத் திட்டத்துக்கு, கல்லால் ஆன குழாயை அமைக்கும் பணியில் ஈடுபடும் தொழிலாளர்கள் பணி செய்யும் இடத்திலேயே சாப்பிட 'கல் தட்டு'. (உணவுக்கும் ஓய்வு தராத பணி, காருண்யமிக்கதான பேரரசில் கொத்தடிமை முறை இருந்ததோ என ஐயமுற வைக்கிறது.)

துங்கபத்ரா அணையிலிருந்து வெளியேற்றப்படும் தண்ணீர் கால்வாய்களாக பிரிக்கப்பட்டு ஊர்களை வளைத்து ஓடுகிறது. ஓடும் நீரில் குளித்துக் கரையேறும் பெண்கள், சாலைகளில் விரையும் வாகனங்களில் பயணிக்கும் ஆண்களின் கண்களை அஞ்சி மரங்களுக்குப் பின் ஒளிகிறார்கள். இந்தப் பாதையில் சென்றால்தான் விஜயநகர வரலாற்றின் செழுமைக்குச் சாட்சியான பிரம்மாண்டமான, 'ராணியின் ஸ்நான மாளிகை'. அதில் கட்டுக் காவலை மீறி சிறுவர்கள் கிரிக்கெட் விளையாடுவதைக் காண முடியும்.

கடந்த கால வரலாற்றின் பதிவாயிருக்கும் இவ்விடம், முன்னோர்களின் கலைத் திறனும் எண்ணத் திறனும் மிளிர்கிற காட்சியகம். நிகழ்காலத்தில் இருந்துகொண்டு உங்கள் முன்னோர்களைத் தரிசிக்க விரும்பினால் ஹம்பிக்குப் போகலாம். போகும்போது கொஞ்சம் ஆத்மார்த்த ஈடுபாட்டை எடுத்துச் செல்ல வேண்டும்? அவ்வளவுதான்!

படங்கள்: **சாமுண்டீஸ்வரி**

## நீங்கள் கேட்டவை


Bossக்கு Boss

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? அத்வானி - ரஜினி சந்திப்பு பற்றி...?

! ''கடவுளின் ஆணைக்குக் காத்திருக்க வேண்டாம்; கரகோஷத்தின் ஆணைக்குக் கட்டுப்படலாம்'' என்ற சோவின் ஆசை வார்த்தைகளுக்குச் செவிசாய்க்காமலிருந்தால் ரஜினி the boss, will be his own boss!

● மு. பெரியசாமி, விட்டுக்கட்டி.

? ராஜீவ் காந்தி கொலைக்கு விடுதலைப் புலிகள் காரணமல்ல என்று திருமாவளவன் கூறியிருக்கிறாரே...?

! ஆஹா! விடுதலைப்புலிகளே ஒப்புக் கொண்டதை மறுக்கும் திருமாவளவன்தான் எவ்வளவு பெரிய புலி அபிமானி!



# அத்வானி - ரஜினி சந்திப்பு பற்றி?

● எஸ். ராமசாமி, சித்தோடு.

? ''இலவசத் தொலைக்காட்சிப் பெட்டிகள் தேவையில்லை; அதற்குப் பதிலாக, அத்தொகையை ஓர் அனல்மின் நிலையம் நிறுவப் பயன்படுத்தலாம்'' என ராமதாஸ் கூறுகிறாரே?

! சரிதான். ஆனால், தேர்தல் வாக்குறுதியாக அதனை தி.மு.க. அறிவித்தபோது, கூட்டணியில் இருந்தவர், அப்போதே தி.மு.க.வுக்கு அதை அறிவுறுத்தியிருக்கலாமே. அப்போது அவர் கட்சியும் இலவசங்களுக்குப்

போஸ்டர் ஒட்டியதே!

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்.

**? ஜெ.வை விட கலைஞர் குறைவாக மின் கட்டணம் செலுத்தி வருவதாக ஆற்காட்டார் சொல்வது வியப்பாக இருக்கிறதே?**

! சிக்கனம், மின்சாரப் பயன்பாட்டில் மட்டுமின்றி அனைத்திலும் தேவைதான். தலைவர்கள் இதில் வழிகாட்ட வேண்டும் என்பதும் உண்மையே. ஆனால், ஜெ. மீதான ஆற்காடு வீராசாமியின் குற்றச்சாட்டு, பிரச்னையைத் திசைதிருப்புகிறதேயொழிய தீர்வுக்கு வழிகாணவில்லை. மின்வெட்டு காரணமாக லட்சக்கணக்கான தொழிலகங்களில் உற்பத்திக் குறைவும் வேலை நீக்கமும் அன்றாட நிகழ்வுகளாகி வரும்போது, ஆற்காட்டார் வோட்டு அரசியல் பண்ணிக்கொண்டிருக்கிறார்.

● எஸ். விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

**? சென்னை சட்டக் கல்லூரி சம்பவத்தால் யாருக்குத் தலைகுனிவு? மாணவர்களுக்கா, காவல் துறைக்கா, முதல்வருக்கா?**

! எங்கும் எதிலும் ஜாதி வேறுபாட்டைத் தகர்ப்பதற்குப் பதில் வளர்க்கும் அரசியல் அணுகுமுறைக்கு!

● இரா. இராஜேந்திரன், மயிலாடுதுறை.

**? ப்ரியங்கா தெரியாத்தனமாக நளினியைச் சந்தித்தார் என்று தராசு சொல்வது விநோதமாக இருக்கிறது. தராசு ஒரு பக்கம் சாய்வது போல் தெரிகிறதே?**

! ப்ரியங்காவுக்கு அரசியலில் தீவிர நாட்டம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.



★ இரண்டு மாத விசா!



★ திசைதிருப்பல் டெக்னிக்!



★ கோல்டன் எக்ஸிட்!

அவரை நளினியிடம் அழைத்துச் சென்றது ஒரு curiosity என்றே நினைக்கிறேன். தவறான செயல் என்பதையும் பின் விளைவுகளையும் எண்ணிப் பார்த்திருந்தால், அந்தச் செயலில் அவர் இறங்கியிருக்கமாட்டார் என்றும் கருதுகிறேன். இப்போது வருந்திக்கொண்டிருப்பார் என்றும் நம்புகிறேன்.

● அகிலா அன்புமணி, ஈரோடு.

**? கடந்த ஆகஸ்டில் இந்தியா வந்த தஸ்லிமா நஸ்ரீன், இரண்டே மாதங்களில் மீண்டும் வெளியேற்றப்பட்டிருக்கிறாரே...?**

! தஸ்லிமா நஸ்ரீனின் அசட்டுத் துணிச்சல் அவருக்கு ஆபத்தை விளைவித்தது எனில், அவருக்குப் புகலிடம் தந்து பாதுகாக்க முடியாதென்று கைவிரிப்பது இந்திய அரசின் கோழைத்தனம்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? 2007-08 நிதியாண்டில் மட்டும் தமிழகத்தில் 10,500 கோடிக்கு மது விற்பனையாகியுள்ள சாதனைச் செய்தி பற்றி...?**

! அதைப் போல் பல்லாயிரம் மடங்கு பெறுமானமுள்ள மனிதவளம் பாழடிக்கப்பட்ட வேதனைச் செய்தி ஐயா இது!

● வீ. ஆனந்தகிருஷ்ணன், சென்னை - 101.

**? காஞ்சி மகாசுவாமிகளின் அருள்வாக்கு (கல்கி 16.11.08 இதழ்) படித்தேன். அவர் சொல்லியிருப்பதன் அடிப்படையில்தான் 'அன்பே சிவம்' என்ற சொல் வழக்கு உண்டானதோ?**

☐ ரூ. 100/- பரிசு பெறுபவர் :
**கீதா, சென்னை - 4.**



* Curiosity விசிட்



* புலிகளின் புலி!



* இலவச அட்வைஸ்!



* கேட்காத பெருமை!

! அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமென்று யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே!
- திருமூலர் திருமந்திரம்.

● அ. மல்லிகா, சென்னை - 78.

**? "நானும் விவசாயம் செய்கிறேன். எனக்கே யூரியா கிடைக்கவில்லை" என அறந்தாங்கி தி.மு.க. எம்.எல்.ஏ. உதயம் சண்முகம் கூறுகிறாரே?**

! எனக்'கே' என்பதில் உள்ள 'ஏ'காரத்தில் ஏகப்பட்ட உட்பொருள் இருக்குங்க! யூரியா தட்டுப்பாடுன்றதை ஒப்புக்கிட்ட மாதிரியுமாச்சு; எம்.எல்.ஏ.வா இருக்கிற யாருக்கும், எதற்குமே தட்டுப்பாடு இருக்கக் கூடாதுன்ற எதிர்பார்ப்பைப் பிரகடனப் படுத்திய மாதிரியுமாச்சு!

● ஆர். ஜெஸிந்த், புதுக்கோட்டை.

**? ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி இனி வீழ்ச்சி அடைந்துவிடுமோ?**

! ஜாம்பவான்கள் பலர் ஓய்வு பெற்றுவிட, வலுக்குறைந்த ஆஸ்திரேலிய அணி கொடுத்த போராட்டத்தை நினைச்சுப் பாருங்க. ஆட்டத்தை 'டிரா' பண்ணாமல் வெற்றிக்கு முயற்சி செய்த துணிவை எண்ணிப் பாருங்க. வீழ்ச்சி அல்ல; எழுச்சி என்பது புரியும்.

● சீதா, சென்னை - 4.

**? நியாய விலைக் கடைகளில் எது வாங்கப் போனாலும் 'இல்லை' என்றுதான் கூறுகிறார்கள். ஐந்நூறு கார்டுதாரர்கள் உள்ள கடைக்கு நூறு பாக்கெட் கொடுத்துவிட்டு, 'மக்களுக்கு நியாய விலையில் தருகிறோம்' என்று கூறுவதில் என்ன நியாயம் இருக்கின்றது?**

! 'உலகின் எந்த நாட்டிலும் அரசு மானியங்கள், உதவிகள் மக்களுக்கு முழுமையாகப் போய்ச் சேருவதில்லை; அதில் தமிழ்நாடு எவ்வளவோ தேவலாம்' என்று முதல்வர் தரப்பில் நியாய வாதம் தயாராக இருக்கிறது!

● சி. மகேஷ், திருச்சி.

**? இறுதிப் போட்டி, இறுதி இன்னிங்ஸில் கங்குலி பூஜ்யம் பெற்றுள்ளாரே?**

! அதனால் அவருடைய சாதனைகள் குறைந்துவிடப்போவதில்லை. பலர் 'கோல்டன் டக்' அடித்துள்ளனர். விடை பெறும் கங்குலிக்கு இந்திய அணி கொடுத்த மரியாதை, மதிப்பு மிக்க பரிசு!

● ஏ.எஸ். யோகானந்தம், கலிங்கியம்.

**? "மக்கள் கேட்காததையும் செய்வது தி.மு.க. அரசுதான்" என்று ஸ்டாலின் பெருமிதப்பட்டிருக்கிறாரே?**

! ஆமாமாம்! மின்வெட்டையும் விலைவாசி உயர்வையும் லஞ்ச ஊழலையும் இதுபோன்ற இன்னும் பலவற்றையும் மக்கள் கேட்கவா செய்கிறார்கள்! பெருமைப்பட வேண்டியதுதான்! ○

★ ரூ. 50/- பரிசு பெறுபவர் :
**எஸ். விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.**



# என்னை இயக்கிய ஹீரோக்கள்...............

மதுரை - தமுக்கம் மைதானத்தில் 'புத்தகக் கண் காட்சி' நடந்தது. அப்போது நான் கல்லூரி முதல் ஆண்டு படித்துக் கொண்டிருந்தேன். கண்காட்சியில் பிரபல கார்ட் டூனிஸ்ட் ஆர்.கே.லக்ஷ்மண் வரைந்த 'You said it' என்ற கார்ட்டூன் புத்தகம் இருந்தது. சந்தோஷத்தில் உறைந்து போனேன். காரணம், அவர் எனது மானசீகமான கேலிச் சித்திரக்காரர். அவர் கார்ட்டூன் களை அப்போதுதான் தொகுப்பாகப் பார்த்தேன். ஒரே ஒரு புத்தகம்தான் இருந்தது. புத்தக விலை யைப் பார்க்க 'கரீர்' என் றது. பெங்குயின் பதிப்பு... மிக அதிக விலை (என் வசதிக்கு). எப்படியாவது புத்தகத்தை வாங்கிவிடும் துடிப்பு ஏற்பட்டது. புத்தகத்தை எடுத்து ஷெல்ஃபின் வேறொரு மூலையில் ஒளித்து வைத்தேன். பணம் தேடும் படலம் தொடங்கியது. வீட்டில் திருட்டுத்தன மாக... பூஜை அலமாரியில் கிடந்த சில்லறைகளைச் சுட்டதில் தொடங்கி, பழைய புத்தகங்களை உருவிக்கொண்டு போய் கடையில் போட்டு காசு பார்த்தது வரை எல்லா நல்ல, கெட்ட வழிகளிலும் எனது முயற்சி தொடர்ந்தது. மறுபக்கம் நாள் தவறாமல் கண் காட்சிக்கும் போய், புத்தகத்தை வேறு வேறு இடத்தில் ஒளித்து வைப்பேன். ஸ்டால்காரர் வேறு தினமும் நான் வந்து போவதால் ஒரு மாதிரி பார்த்தார். முடிந்த அளவு வெளியில் கடன் கேட்டுப் பார்த் தும் பணம் தேறவில்லை.

கடைசியில், என் நண்பன் வரதராஜ னின் அண்ணன் பாலமுருகன், நான் புத்த கத்தை ஒளித்து வைத்து பணம் திரட்டும் 'மகோன்னத' விஷயம் அறிந்து நெகிழ்ந்து, மீதி பணம் முழுவதையும் அவரே பரிசாகக் கொடுத்தார் (அல்லது ஒசியாகக் கொடுத் தார் எனலாம்). வீறுநடை போட்டு புத்தக ஸ்டாலை அடைந்தேன். தெரிந்த இளை மாக்ஸ்தான். புத்தகம் இல்லை. நான் பதறிப்போய்த் தேடினேன். கடைக்காரரி டம் இங்கிருந்த புத்தகம் ஒன்றைக் காண வில்லை எனக் கூறி, அதன் அட்டையில் என்ன படம் இருந்தது என 'மூன்றாம் பிறை' படத்தில் கமல் பானையைத் தலை



## இயக்குநர் சிம்புதேவன்

தோடு வெளியேறும்போது இல்லாவிட்டா லும்... மனசெல்லாம் சந்தோஷம்!

லக்ஷ்மண் புத்தகம் தூண்டுதலோடு உடனே நானும் கார்ட்டூன் வரைந்து பார்த்தேன். யாராவது பெரிய கார்ட்டூனிஸ்டிடம் கேட்டால் இன்னும் வழிமுறைகள் சொல்லுவார்களே என நினைத்து, விகடனின் சீனியர் கார்ட்டூனிஸ்ட் ஸ்ரீதர் (பரணீதரன்) அவர்களுக்குக் கடிதம் எழுதினேன். அவர் அப்போது விகடனிலிருந்து ரிட்டையர்டு ஆகிவிட்டார். 'நீ வரைந்த கார்ட்டூன்களை எனக்கு அனுப்பி வை' என அவர் பதில் எழுதினார். உடனே எனது கேலிச் சித்திரங்களை எல்லாம் அவருக்கு அனுப்பி வைத்தேன். நான்கு நாட்கள் கழித்து ஒன்பது பக்கத்துக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். உன்னதமான கடிதம்! 'கார்ட்டூன் என்பது என்ன? எப்படித் தொடங்க வேண்டும்? எப்படி பயிற்சி எடுப்பது? தவிர கோடுகளின் தன்மை, கறுப்பு வைப்பது, எக்ஸ்பிரஷன், உடல் மொழி' என சகலத்தையும் குரு ஸ்தானத்தில் கூறியிருந்தார். அவர் சொன்னதையெல்லாம் பண்ண ஆரம்பித்தேன். ஒருமுறை சென்னை வந்தபோது அவரை நேரில் போய் சந்தித்தேன். அவர் வீட்டில் உபசரித்துப் பேசினார். அற்புதமான சந்திப்பு. 'நீ கல்லூரிப் படிப்பையும் நல்லா முடி. கேலிச் சித்திரம் வரையறது கஷ்டமான விஷயம். பயிற்சிதான் உனக்கு குரு.

* மதி



18

# கத்தியும்... பதுமம்!

யில் வைத்து ஸ்ரீதேவிக்கு நடித்துக் காண்பிப்பாரே அதுபோல் நடித்தெல்லாம் காண்பிக்க, அவர் ''நிறுத்துங்க சார். லக்ஷ்மண் புக்குதானே?'' என உள்ளே அட்டைப் பெட்டிக்குள் இருந்து எடுத்துப் போட்டார். அதனுள் அதே புத்தகம் மேலும் நாலைந்து கிடந்தது. ''பெரிசா பதறீங்க... இதையெல்லாம் எவனும் வாங்க மாட்டான்! இதையா இவ்வளோ நாள் ஒளிச்சு வச்சீங்க?'' என பரிதாபமான கோபத்தில் பார்த்தார். நுழையும்போது இருந்த வீறுநடை, புத்தகத்

நிறைய ப்ராக்டீஸ் பண்ணு. விடாம ஸ்பாட் ஸ்கெட்ச் பண்ணு!' என, எனக்குப் பிள்ளையார் சுழி போட்டுத் தொடங்கி வைத்த பெரியவர் ஸ்ரீதர் சார்.

**வி**கடனில் வேலைக்குச் சேர்ந்தபோது ஆசிரியர் எஸ். பாலசுப்பிரமணியனும் ப்ராக்டீஸ் பற்றித்தான் அடிக்கோடிட்டார். இணையாசிரியர் - கார்ட்டூனிஸ்ட் மதனோ, அதைப் பல மடங்கு புரிய வைத்தார். அவருக்குக் கீழ் பணிபுரிந்த இரண்டு வருடங்கள் மறக்க முடியாதது. 'நையப் புடைப்பது' என்பதை ப்ராக்டிகலாக உணர்ந்திருக்கிறேன். வரைய விட்டே பெண்டு கழட்டுவார். ராணுவத்தில் பணி புரிவது போல் இருக்கும். ஐந்து ஜோக் இருந்தால் இரண்டு பக்க ஜோக்ஸ் ரெடி. அதற்காக மதன் சாருக்கு பதினைந்து ஜோக் அனுப்புவேன், மூன்றுதான் செலக்ட் பண்ணுவார். மறுபடி பத்து அனுப்புவேன். இரண்டு தேர்வாகும். வேகமாகவும் கிரியேடிவாகவும் பண்ண வேண்டும். முடிப்பதற்குள் கண் இருட்டி, மூச்சு முட்டிப் போகும். நான் வரைந்த பேப்பரிலேயே அவர் வரைந்து காண்பித்து என் தவறுகளைப் புரியவைப்பார். டயலாக்குகளை ஷார்ப் பண்ணிக் காட்டுவார். ரயில்வே ஸ்டேஷன், மார்க்கெட் என நேரில் பார்த்து வரைந்த ஸ்கெட்ச் நோட்டுகளில் கரெக்‌ஷன் சொல்வார். நான் வரைவதில் மூன்றில் ஒரு பங்கைத்தான் எப்போதும் செலக்ட் பண்ணுவார்.

''என்னடா இப்படி பண்றேன்னு நினைக்காதீங்க சிம்பு. இந்தக் கஷ்டமும், பயிற்சியும் தான் உங்களைக் கைதேர்ந்த கார்ட்டூனிஸ்டா, க்ரியேட்டிவ் பெர்சனா மாத்தும். நான் வந்த புதுசுல கார்ட்டூனிஸ்ட் ஸ்ரீதர் நான் வரையறதில் அஞ்சில் ஒரு பங்கைத்தான் செலக்ட் பண்ணுவார். அவரோட கம்பேர் பண்ணா நான் பெட்டர். எப்பவுமே நிறைய யோசிச்சு வடிகட்டி எடுக்கும்போதுதான் 'பெஸ்ட் பீஸ்' கிடைக்கும்!'' என்பார். என்னை வறுத்தெடுத்துப் பதப்படுத்திய என் மரியாதைக்குரியவர் மதன் சார்.



* கேசவ்

**'H**indu' கேசவ் அவர்களின் கேலிச் சித்திரங்கள் எனக்கு மிகப் பிடிக்கும். அவர் வீட்டுக்குப் போய் சந்தித்தபோது, இடமான முனிவர் போல் சாந்தமான புன்னகையோடு இருந்தார். அவரும் ஸ்ரீதர் சாரால் உருவாக்கப்பட்டவரே! நுணுக்கமான பார்வையும், சிந்தனையும் உடையவர். எந்த வித ஈகோவும் இன்றி அவருக்குத் தெரிந்ததை முழுதாகச் சொல்லித் தருவார். எங்கள் நட்பு தொடர்ந்தது. எனது கார்ட்டூன்கள் பற்றி விமர்சனம் சொல்லுவார். அடிக்கடி அவர் வீட்டுக்குப் போவேன். நிறைய புத்தகங்கள் படிக்கும் பழக்கம் உடையவர். கார்ட்டூனிஸ்ட்டின் அடிப்படைத் தகுதியே - எல்லா சப்ஜெக்ட் பற்றியும் கொஞ்சமாவது தெரிஞ்சிருக்கணும் என்பார். அவர் ரியலிச ஓவியரும் கூட. 'கார்ட்டூனிஸ்ட் வேலையும் கத்திச் சண்டை மாதிரிதான். எந்த அளவுக்குப் படிச்சு உங்க அறிவுக்கு தீனி போடுறீங்களோ... அந்த அளவுக்கு உங்க கத்தி பதமா இருக்குன்னு அர்த்தம். அதே நேரம் எந்தக் கருத்தையும் சொல்ல உனக்கு உரிமை இருக்கு. ஆனா அதன் மூலம் யார் மனசையும் புண்படுத்தக் கூடாதுங்கறதுதான் முக்கியம்!' என்பார் கேசவ் சார்.

* ஸ்ரீதர்



**கா**ர்ட்டூனிஸ்ட் 'மதி'யை அம்மன் கோவில் தெருவில் உள்ள அவர் வீட்டில் வைத்துத் தான் முதன்முதலில் சந்தித்தேன்.

புன்னகை தவழும் சீரியஸானவர். என் அன்புக்குரிய நண்பர். வெவ்வேறு பத்திரிகை அனுபவங்களுக்குப் பின் தினமணியில் நுழைந்து, கார்ட்டூன் எனும் கலையை தமிழ்நாட்டில் வேறு ஒரு தளத்துக்கு எடுத்துச் சென்றவர். தினப் பத்திரிகையில் வரும் கார்ட்டூன்களின் வீச்சை நீண்ட வருடங்களுக்குப் பின் அழுத்தமாக மக்கள் மனத்தில் விதைத்தவர். நாங்கள் நிறைய விஷயங்களைப் பகிர்ந்துகொள்வோம். அவர் உரையாடல் மூலம் எனக்குப் பல விஷயங்கள் புரியும். கார்ட்டூனில் ஒரு கருத்தை நூறு சதவிகிதம் எப்படி வெளிப்படுத்துவது? பின்னணியின் முக்கியத்துவம், வார்த்தைகளின் எளிமை, என்ன மாதிரியான உதாரணம் சொல்வது, நடுநிலைமை எனப் பல கோணங்களில் போகும். 'எந்த ஒரு விஷயத்தையும் பார்த்தவுடனே முதலில் அதில் உள்ள குறைதான் கண்ணுக்குத் தெரிய வேண்டும். அதுதான் கார்ட்டூனிஸ்டின் அடிப்படைத் தகுதி' என்பார். தத்துவத்திலும், ஆன்மிகத்திலும் மிகுந்த ஈடுபாடு உள்ளவர் மதி. 'ஒரு கலைஞன் இயல்பாகவே நல்ல படைப்பைக் கொடுக்கலாம். தவ மனநிலையில் அதைப் படைக்கும்போது, அது பத்து மடங்கு அதிக பலத்தோடு வரும். அந்த மனநிலையில் நேசிப்பு அதிகம் இருக்கும். நேசிப்புதான் படைப்புக்கு உயிர் தரும்!' என்பார். சமீபத்தில் வெளியான அவரது கார்ட்டூன் புத்தகங்கள் தமிழில் முதன்முறையாக முக்கியமான பதிவு. என் திரைப்படங்களையும் பார்த்துவிட்டு, நீண்ட நேரம் நிறைகுறைகளைப் பேசி இன்றுவரை என்னை உற்சாகப்படுத்துகிறார்.

நான் கார்ட்டூனிஸ்டாகப் பயணம் தொடங்கியபோது எனக்கு முன்னால் பயணித்த பெரிய கலைஞர்கள் இவர்கள். இவர்களது நட்பின் மூலம் கார்ட்டூன் துறை மட்டுமின்றி உலக அளவிலான மற்ற விஷயங்களின் பயணத்தையும், ஆளுமையையும் கற்றுக்கொண்டேன் என்பது தான் நன்றிக்குரிய உண்மை.




**(அடுத்த இதழில் முடியும்)**



## சட்டக் கல்லூரி விவகாரம்

# ஷாக் அடிக்கும் உண்மைகள்!

''டி.வி. திரையில் அந்தக் கொலை வெறித் தாக்குதல் சம்பவத்தைப் பார்த்தபோது நான் அதிர்ந்து போனேன்; கண்ணெதிரே மாணவர்கள் உருட்டுக் கட்டை, கத்தி, இன்னபிற ஆயுதங்களுடன் கொடூரமான முறையில் தாக்குதலில் ஈடுபடும்போது, போலீஸ் அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்ததைக் கண்டு, நானும் காக்கிச் சீருடை அணிந்து பணியாற்றியவன் என்ற முறையில் வெட்கத்தில், வேதனையில் தலை குனிந்தேன்.'' இப்படிச் சொல்கிறவர், சி.பி.ஐ.யின் துணை இயக்குனராகவும், தமிழ்நாட்டின் காவல் துறைத் தலைவராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற வி.ஆர். லட்சுமி நாராயணன்.

''சென்னை சட்டக் கல்லூரியில் மாணவர்களுக்குள்ளே இருக்கும் ஜாதி அடிப்படையிலான கோஷ்டி சண்டையோ, மாணவர்கள் - போலீசார் மோதலோ புதிதல்ல. இந்த ஆண்டு மே மாதத்திலும் பிப்ரவரியிலும் இரண்டு வழக்குகள் பதிவாகியுள்ளன.

'சட்டக் கல்லூரியில் என்னதான் பிரச்னை?' என்று கண்டறிய சென்னை உயர்நீதிமன்றம் வி.ஆர்.லட்சுமி நாராயணன் தலைமையில் ஒரு கமிட்டியை அமைத்தது. அது தன் அறிக்கையை உயர்நீதிமன்றத்தில் சமர்ப்பித்தது. அதில் பிரச்னைகளையும், பிரச்னைகளுக்கான தீர்வையும் குறிப்பிட்டிருந்தது. ஆனால், அறிக்கையின் பேரில் எந்தவிதமான நடவடிக்கையையும் தமிழ்நாடு அரசு எடுக்கவில்லை. இப்போது நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. இது இப்படியே தொடர அனுமதிப்பது வக்கீல்கள் சமுதாயத்துக்கே அவமானம். அதனால்தான் சட்டக் கல்லூரி விவகாரம் தொடர்பாக வழக்கு போட்டிருக்கிறோம்'' என்கிறார் வழக்கறிஞர் ராஜா.



✱ லட்சுமி நாராயணன்

''மாணவர்கள் தங்கிப் படிக்கத் துளியும் அருகதை இல்லாத இடம் சட்டக்கல்லூரி விடுதி. வசதியான குடும்பத்து மாணவர்கள் தனியார் ஹாஸ்டல்களுக்குப் போய்விடுவார்கள். வசதி இல்லாத தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்களும், பிற்படுத்தப்பட்ட வகுப்பு மாணவர்களும் அரசாங்கம் தரும் உதவித் தொகையை நம்பி ஹாஸ்டலில் தங்கிப் படிப்பார்கள். அரசு இயந்திரத்தின் மெத்தனப்போக்கு காரணமாக, அவர்களுக்கு உதவித் தொகை உரிய நேரத்தில் கிடைக்காது. இதனால், மெஸ் பில் கட்டுவதில் பெரும் தாமதம் ஏற்படும். எனவே அடிக்கடி ஹாஸ்டலின் மெஸ் மூடப்படும். அப்போது, மாணவர்கள் சுற்று வட்டாரத்தில் உள்ள ஓட்டல்களில் சாப்பிடுவார்கள். சமயத்தில் ஓட்டல்களில் காசு கொடுக்காமல் தகராறு செய்ததாலும் கலவரங்கள் நடந்துள்ளன'' என்று கூறும் லட்சுமி நாராயணன், ஜாதி அடிப்படையிலான கோஷ்டிப் பூசல்களையும் விளக்குகிறார்: ''தாழ்த்

தப்பட்ட மாணவர்களுக்குள் திருமாவளவன் பிரிவு, கிருஷ்ணசாமி பிரிவு என்று இரண்டு கோஷ்டிகள் உண்டு. இவர்களுக்குள் எப்போதும் மோதல் புகைந்துகொண்டே இருக்கும். (இப்போது மாயாவதி ஆதரவு கோஷ்டியும் இருக்கிறதாம்) பிற்படுத்தப் பட்ட மாணவர்களுக்கு, தலித் மாணவர் களுடன் ஒன்றாக ஒரே ஹாஸ்டலில் இருப்பதா? என்ற மனப்பான்மை இருப்பது தெரியவந்துள் ளது. இவை அனைத்தும் ஹாஸ்டலோடு நிற்காமல்,


● வழக்கறிஞர் ராஜா





கல்லூரியிலும் புகைகிறது. தவிர, ஜூனியர் மாணவர் கள் பாலியல் வன்முறைக்கு உள்ளாக்கப்படுவதாகவும் செய்திகள்'' என்கிறார் லட்சுமி நாராயணன்.

''சட்டப் படிப்பு, அரசியலுக்குப் போக ஒரு பாஸ்போர்ட் என்றுதான் நினைக்கிறார்கள்'' என்கிறார் வழக்கறிஞர் ராஜா. ''கல்லூரி முதல்வரிடமிருந்து முறையான அனுமதி இன்றி போலீஸ் கல்லூரி வளா கத்துக்குள்ளே செல்லக்கூடாது என்ற மரபு நெடுங் காலமாகக் கடைப்பிடிக்கப்படு கிறது. இவ்விஷயத்தில் வன் முறைக்கான சாத்தியக்கூறுகள் இருப்பதாகத் தெரிந்தபின்னும், முதல்வர் காவல்துறை உதவியை நாடவில்லை. எனவேதான், இதன் தீவிரம் உணர்ந்து உயர்நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தோம்'' என் கிறார்.

''இவ்விஷயத்தில் உயர்நீதி மன்றம் தலையிட்டு, வக்கீல்கள் குழு ஒன்றை ஏற்படுத்தி, சட்டக் கல்லூரி சம்பந்தமான விஷயங் களைக் கவனித்துச் சீர்திருத்தி, இழந்த மரியாதையையும் கௌர வத்தையும் மீட்கவேண்டும்'' என்கிறார் ராஜா.

**- எஸ். சந்திரமௌலி**

## வட்டமேஜை

# கலக்கலான 'கல்லூரிச் சாலை' கலக்குறியே கல்கி!

தேசத்துக்காகப் பாடுபட்ட வாஞ்சி நாதனை, சுயநலமே உருவான பிரபாகர னுடன் ஒப்பிட்ட கமலுக்கு, தராசாரின் பதில் சூப்பர்ப்!

- அரவக்குறிச்சிப்பட்டி
எம்.அசோக்ராஜா, திருச்சி

மழையடிவாரம் கவிதை மனத் தின் அடிவாரம் வரை பெய்து, என்னை சந் தோஷ மழையில் நனைத்து விட்டது, அந்த உபயோக திரவம்.

- சி.என். ரமாதேவி, சென்னை - 83

கலக்கலான 'கல்லூரிச்சாலை'. கலக்குகிறதே கல்கி தொடரட்டும் இப்பணி!

- பி.இ. மகாலிங்கம், சென்னை

லேப் என்றாலே லட்-டப் எகிறும். ஸ்கேன் என்றாலே ப்ரைன் துடிக்கும். இதை ஹாஸ்பிடல் எத்திக்ஸில் நல்லாவே ஸ்கேன் பண்ணிச் சொல்லிட்டீங்கய்யா!

- மல்லிகா அன்பழகன், சென்னை -78

ஒபாமா என வர்ணித்துக்கொண்ட சிரஞ்சீவிகாருக்கு

தராசு ஒத்தை வரியில் அளித்த பதில் 'சூப்பர்.'

- த. சத்தியநாராயணன், அயன்புரம்

'பெருநாள் காக' சிறுகதை மனத்தைத் தொட்டது.

- வி.ஆர்.ராஜேஷ், சென்னை

'ஏகன்' விமர்சனம் கனகச்சிதமாக உள்ளது.

- அ. முரளிதரன், மதுரை - 3

தா. பாண்டியன் ''அ.இ.அ.தி.மு.க. உட்பட மற்ற கட்சிகளை ஒருங்கிணைக்கும் முயற்சியில் இருக்கிறோம்'' என்கிறார். ஒன்றே முக்கால் லட்சம் அரசு ஊழியர்களை ஒரு பேப்பரில் வீட்டுக்கு அனுப்பிய ஜெயலலிதாவை, அவ்வளவு சுலபத்தில் தொழிலாளி வர்க்கம் மன்னிக்காது.

- இரா. இராஜேந்திரன், மயிலாடுதுறை

அக்குபஞ்சர் மருத்துவமுறை மூலம் பஞ்ச பூத சக்திகளைச் சரிவிகிதத்தில் பெற முடியும் என்பது ஆச்சர்யமான செய்தி.

- வி.எஸ். கீர்த்தனா, ஈரோடு - 11

என்ன மெய் மறந்துட்டீரா? 'நடக்குமென்பார்; நடக்கும்!' ராசி பலன் பகுதியில் 16.11.08 முதல் 22.11.08 வரை என்பதற்குப் பதில் 23.11.08 முதல் 29.11.08 எனத் தவறாக அச்சிட்டு உள்ளீரே!

- எஸ். கௌரி மீனாட்சி, மதுரை - 19

இந்த இதழில் 'நடக்குமென்பார்; நடக்கும்!' ராசிபலனில் தேதி தவறாக அச்சாகியுள்ளது. 23.11.2008 முதல் 29.11.08 என்று திருத்தி வாசிக்கவும்.

(- ஆ.ர்)

சித்தியின் 'சிறகுகள்' படத்தில் ஒன்று மட்டும் ஆணித்தரமாகத் தெரிகிறது. அதுதான் ராதிகாவின் இடைவிடாத உழைப்பு!

- லதா ராஜகோபால், சென்னை - 24



# ரீடர்ஸ் கார்னர்

பாரத ரத்னா பட்டம் பெற்ற முதல் ஹிந்துஸ்தானி பாடகர் பீம் சேன் ஜோஷி. ஊர் ஊராக அலைந்து திரிந்த ஜோஷி, அந்நாளில் புகழ்பெற்ற நாடகக் கம்பெனியின் (நியூ தியேட்டர்ஸ்) பஹாடி சன்யால் என்ற நடிகரின் (பாடகரும்கூட) குழுவில் சேர்ந்தார். அவரிடம் சரியான பாடம் பெறாத நிலையில் வெளியேறி சிறு சிறு ஏவல் வேலைகளைச் செய்து பின் அவரிடமிருந்து வெளியேறிவிட்டார். மிக நீண்ட இடைவெளிக்குப் பின் சன்யாலை பீம்சேன் ஜோஷி தன் கச்சேரியில் சந்தித்தார். அந்தச் சந்திப்பின்போது ஜோஷி, சன்யாலிடம், 'உங்களிடம் ஏவல் வேலைகளைச் செய்த பையனை உங்களுக்கு நினைவு இருக்கிறதா?' என்று வினவ, அவரும், 'அந்த உருப்படாத முட்டாளை நினைவு கூராதே' என்றாராம்! ஆனால் ஜோஷியோ 'அந்த முட்டாள் பையன் நான்தான்!' என்று பணிவுடன் கூறினாராம்! முட்டாள் புத்திசாலிகளை காலம்தான் தீர்மானிக்கிறது.

– ஹேமா, மும்பை

சென்ற இதழில் ஸ்கேனிங் மையங்கள் டாக்டர்களுக்குக் கொடுக்கும் கமிஷன் கறுப்புப் பணமாகப் புழங்குவதாகக் கூறப்பட்டிருந்தது. ''அப்படி அவசியமில்லை. ஸ்கேனிங் மையங்கள் 'இண்டர்ப்ரடேஷன் கட்டணம்' என்ற பெயரில் வெளிப்படையாகவே டாக்டர்களுக்கு இந்தத் தொகையை அளிக்கின்றன'' என்கிறார் ஒரு மருத்துவர்!

● இந்தக் கட்டணம் நியாயமானதா...? நோயாளிக்கு மிக அதிகமாகச் செலவுச் சுமையை ஏற்றுவதோடு, தரமற்ற பரிசோதனைச் சாலைகளுக்கும் டாக்டர்கள் பரிந்துரைக்க இது காரணமாக அமையுமல்லவா?

● எம்.ஆர்.ஐ. ஸ்கேன் தேவைப்படும்போது அதைக் குறிப்பிட்ட மையத்தில் எடுத்து வரச் சொல்வது, அப்படிப்பட்ட தேவையே இல்லாதபோது கூட ஸ்கேனை எடுக்கச் சொல்வது என இரு வகைகளில் நோயாளிகள் ஏமாற்றப்படுவது சகஜமாக நிகழ்கிறது.

● சி.டி. ஸ்கேனிங்கையோ எம்.ஆர்.ஐ. ஸ்கேனிங்கையோ மருந்துச் சீட்டில் எழுதித் தரும்போதே 'சலுகைக் கட்டணத்தில் எடுக்கவும்' என்று குறிப்பிடும் மருத்துவர்களும் இருக்கிறார்கள். அதாவது அவர்களுக்கு கமிஷன் தேவையில்லை என்று இதற்கு அர்த்தம். பலர், ஏழை நோயாளிகளுக்கு மட்டும் இந்தச் 'சலுகை'யைத் தருகிறார்கள்!

# நோயாளியிடமே



● ஒரு ஸ்பெஷலிஸ்ட் டாக்டர் மருத்துவமனை தொடங்குகிறார். நியாயமாக என்ன நடக்க வேண்டும்? அடிப்படையான சிகிச்சை தேவைப்படுபவர்கள் அங்குள்ள பொது மருத்துவரிடம்தானே அனுப்பப்பட வேண்டும். மற்றபடி இதய நோய் என்று ஒருவர் வந்தால் அவரை அங்குள்ள கார்டியாலஜிஸ்டிடமும், முதுகெலும்பில் பிரச்னை என்றால் அங்குள்ள ஆர்த்தோ டாக்டரிடமும்தான் அனுப்ப வேண்டும். ஆனால் அந்த மருத்துவமனையின் உரிமையாளரான ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள், எந்த நோய் என்று யார் வந்தாலும், தாங்களே சிகிச்சை செய்யத் தொடங்கிவிடுகிறார்கள். நிலைமை

# கமிஷன்?

முற்றினால் மட்டுமே சம்பந்தப்பட்ட ஸ்பெஷலிஸ்டிடம் அனுப்புகிறார்கள். மருத்துவமனை கட்டவும் உபகரணங்கள் வாங்கவும் நிறைய முதலீடு செய்துவிட்டதால், அனைத்துப் பரிசோதனைக் கருவிகளையும் உபயோகித்து கட்டணம் வசூலிக்க நிர்பந்தம் ஏற்படுகிறது. இந்த நிர்பந்தத்தால் நோயாளிகள் அனாவசிய செலவுக்கு உள்ளாக்கப்படுகிறார்கள்!

● பல தனியார் மருத்துவமனைகளில் சிகிச்சைக்குச் செல்வோர், ஒரு டாக்டருக்குப் பதிலாக மூன்று டாக்டர்களிடம் அனுப்பப்படுவார். இதன் மூலம் மருத்துவமனைக்குக் கமிஷன் கிடைப்பதுதான் காரணம்.

● தனியார் மருத்துவமனையின் உரிமையாளரான ஒரு டாக்டர், 'இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்கள் பெரிய மருத்துவமனைகள் குறிக்கும்




## ஹாஸ்பிடல் எத்திக்ஸ்

ஜி.எஸ்.எஸ்.

**இதுபோன்ற அநீதிகளை எப்படி நோயாளிகள் எதிர் கொள்வது? எலும்பு நல மருத்துவர் டாக்டர் எம்.பார்த்த சாரதி அளித்த ஆலோசனை இது:**



எம்.பார்த்தசாரதி

''மக்கள் நேரடியாக தனியார் மருத்துவமனைகளை அணுகுவதை முடிந்தவரை தவிர்க்க வேண்டும்.

குறிப்பிட்ட மருத்துவத்தில் சிறப்புப் பயிற்சி பெற்ற ஒருவர் அந்தப் பிரிவுக் கான சிகிச்சைகளை மட்டுமே அளிக்கும் மருத்துவமனைகளைத் துவக்கினால் அங்கு சிகிச்சை பெறலாம். மேலும், ''மருத்துவ நிகர்நிலைப் பல்கலைக் கழகங்கள் என்பது ஒரு சாபக்கேடு என்பது என் தனிப்பட்ட கருத்து. என்றாலும் அவை நடை முறையில் வந்துவிட்டன. குறைந்த பட்சம் மருத்துவத் தேர்வுகளையாவது அரசே நடத்தவேண்டும்.

இப்போது என்ன நடக் கிறது? பல லட்சங்கள் (சில சமயம் கோடி கூட) கொடுத்து தங்கள் தனியார்ப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்த ஒரு மாணவன் மருத்துவக் கல்வியில் தகுதி பெறாமல் இருந்தாலும் அவனை பாஸாக்கிவிடு கிறது அந்த அமைப்பு. இப்படித் தகுதி குறைந்தவர்கள் டாக்டர்களாக வலம் வந்தால் சமூகத்தின் கதி என்னாகும்? இதைப் பற்றிச் சம்பந்தப்பட்டவர்கள் சிந்திக்க வேண்டும்!

கட்டணங்களை அப்படியே அளித்துவிடுகின்றன. ஆனால், எங்களைப் போன்ற சிறிய மருத்துவமனைகளில் இந்தக் கட்டணங்களை அதிரடியாகக் குறைக்கிறார்கள். எனவே மறைமுகக் கட்டணங்களை நோயாளிகளிடம் இருந்து வசூலிக்க நிர்பந்திக்கப்படுகிறோம்' என்று ஒப்புக்கொள்கிறார்.

- இந்த முறைகேடுகள் எல்லா மருத்துவமனைகளிலும் எப்போதும் நிகழ்வதில்லை என்றாலும் இன்று பரவலாகக் காணப்படுவதை மருத்துவர்களே தனிப்பட்ட முறையில் உரையாடுகிறபோது ஒப்புக் கொள்கிறார்கள். மருத்துவக் கருவிகளின் விலை, அரசின் ஆதரவற்ற கொள்கை போன்றவையும் இத்தகைய முறைகேடுகளைத் தூண்டுகின்றன என்கிறார்கள்.

(தொடரும்)



''நர்ஸ்... ஆபரேஷனுக்கு எல்லாம் ரெடியா?''

''பேஷண்ட் கிடைச்ச உடனே ஆரம்பிச்சுடலாம் டாக்டர்!''

- ச.ஆ.கேசவன், கோவில்பட்டி

# வில்லனாய் நடித்த ஹீரோ!

எம்.என்.நம்பியார் அவர்களின் வாழ்க்கை அனுபவங்களை, 'கல்கி'யில் தொடராக எழுத எனக்கு கல்கி ராஜேந்திரன் ஸார் அனுமதி வழங்கியபோது தெளிவாக ஒன்றைச் சொன்னார்.

''அருமையான கலைஞர். நல்ல மனிதர். 'கல்கிக்காக உங்கள் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ள வேண்டும்' என்று அவரை நானும் வந்து நேரில் கேட்பதுதான் முறை'' என்றார்!

1997 ஜூலையில் ஒருநாள் ஆசிரியரும், நானும் கோபாலபுரத்தில் நம்பியார் வீட்டில் அவரைச் சந்தித்தோம். ரொம்ப நேரம் மசியவே இல்லை. கடைசியில் எங்களுக்குத்தான் வெற்றி.

''நான் எப்பவுமே என் மேல வெளிச்சம் விழறதை விரும்பறவன் இல்லை. நடிக்கும்போது விளக்கு வெளிச்சம் விழறதை மட்டும்தான் விரும்புவேன். அதனால்தான் இதுக்கு முன்னாடி பல பத்திரிகைகள் கேட்டப்போ நான் வெற்றிகரமா மறுத்து வந்தேன். இப்போது 'கல்கி'யில் மாட்டிக்கிட்டேன்'' என்றார்.



'நான் வில்லன் அல்ல' என்ற தலைப்பில் கல்கியில் தொடர்ந்து 15 வாரங்கள் அவர் கதையை எழுதினேன். ஒவ்வொரு முறை அவரைச் சந்திக்கச் செல்லும்போதும் நான் அவர் வீடு நெருங்கியதும் கேட் திறக்கும். எப்படி என்று ஆச்சரியமாக இருந்தது. அவர் வீட்டு ஹாலில் இருந்து பார்த்தால் ரோட்டில் போகிறவர்களைப் பார்க்க முடியும். என்னைப் பார்த்ததும் கேட் செக்யூரிட்டிக்கு 'கதவைத் திற' என்று உத்தரவு போகும் என்பதை, பிறகு தெரிந்து கொண்டேன்.



காலையில் வாக்கிங் போய் வந்த ஷார்ட்டுடன் அமர்ந்திருப்பார். அப்படியே பேசுவோம். அதுகூடப் பரவாயில்லை. ஒருநாள் வெறும் ஜட்டியுடன் உட்கார்ந்திருந்தார்.

''இன்னிக்கு இப்படித்தான். உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணையில்லையே! இருந்தால்தான் என்ன, பேட்டி முடியும் வரை கண்ணை மூடிக் கொள்ளுங்கள்'' என்றார்.

நான் கண்ணை மூடிக் கொள்ளவில்லை. நம்பியாரைப் போல எம்.ஜி.ஆருடன் நட்பு பாராட்டியவர்கள் வேறு யாருமிருப்பார்களா என்பது சந்தேகம்.

ஒரு சம்பவம். நம்பியார் அதைச் சொன்னபோது என்னால் முதலில் அதை நம்ப முடியவில்லை.

அரசிளங்குமரி படத்தைச் சீக்கிரம் முடித்துத் தராமல்

- ராணிமைந்தன்



நான் எப்பவுமே என் மேல் வெளிச்சம் விழறதை விரும்பறவன் இல்லை. நடிக்கும்போது விளக்கு வெளிச்சம் விழறதை மட்டும்தான் விரும்புவேன்.



எம்.ஜி.ஆர். இழுத்தடித்துக் கொண்டிருக்கிறாரே என்று தயாரிப்பாளருக்குப் பெரிய வருத்தம். இந்த வருத்தத்தை நம்பியார் அறிந்திருந்தார்.

ஒருநாள் அந்தப் படத்தின் ஷூட்டிங். எம்.ஜி.ஆர். - நம்பியார் கத்திச் சண்டை சீன். லாங் ஷாட்.

கத்தியை எப்படிச் சுத்தினாலும் எம்.ஜி.ஆர். சமாளிப்பார் என்று நம்பியாரும், தம் மீது கத்தி படாமல் கவனமாகத்தான் நம்பியார் சுற்றுவார் என்று எம்.ஜி.ஆரும் நம்பிக்கையுடன் சுழன்று, கத்தியைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். எங்கேயோ தப்பு நடந்து போய், எம்.ஜி.ஆர். கண்ணில், நம்பியாரின் கத்தி குத்திவிட்டது.

''என்ன வேய் இப்படிப் பண்ணிட்டீங்க?'' என்று எம்.ஜி.ஆர். கேட்க, நம்பியார் சமாளித்துக் கொண்டு, எம்.ஜி.ஆர். கேட்ட கேள்விக்கு, ''போய்யா... பட முதலாளி குத்தச் சொன்ன இடத்தில நான் இன்னும் குத்தல்ல'' என்று பதில் சொன்னார்.

''முதலாளி எங்க குத்தச் சொன்னார்?''

''உங்க நெஞ்சைப் பார்த்து குத்தச் சொன்னார்.''

''ஏன்... ஏன் அப்படிச் சொன்னாரு?''

''அவங்க படத்தை முடிச்சுக் குடுக்காம கொஞ்சநஞ்சமாவா நீங்க அவங்களைக் கஷ்டப்படுத்தறீங்க?''

நம்பியார் இப்படிச் சொல்வார் என்று 'செட்'டில் யாரும் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. பக்கத்தில் இருந்த புரொட்யூசர் வெலவெலத்துப் போய், ''என்ன அண்ணே... எம்.ஜி.ஆர்.கிட்ட போய், இப்படி என்னை மாட்ட வெச்சிட்டீங்களே'' என்று ரகசியமாய் வருத்தப்பட்டார்.

''கவலைப்படாதீங்க. நான் இப்ப ஒப்பனா சொல்லிட்டேனில்ல. இனிமே பாருங்க. படம் சீக்கிரம் முடிஞ்சுடும்'' என்றார் நம்பியார். அப்படியே நடந்தது.

இந்தச் சம்பவத்தைச் சொல்லி நம்பியார் சிரித்த சிரிப்பு இன்னமும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

**'எ**னக்கென்று சில ஆசைகள் உண்டு. அவற்றை எழுதுங்கள்' என்று அவர் என்னிடம் தெரிவித்தவை என்ன தெரியுமா?

''சமீபத்தில் அமெரிக்க விஞ்ஞானிகள் ஒரு புதிய நட்சத்திரத்தைக் கண்டு பிடிச்சிருக்காங்கன்னு பேப்பர்ல படிச்சேன். சூரிய ஒளியைவிட ஒரு கோடி மடங்கு அதிகமான ஒளி உள்ள கிரகமாம் அது. வினாடிக்கு மூணு லட்சம் மைல் ஸ்பீட்ல போனா இருபத்தையாயிரம் வருஷங்கள்ல அங்கே போய்ச் சேர்ந்துடலாம். எனக்கு அங்கே போகணும்னு ஆசை'' என்றார்.

**ச**பரிமலைக்குப் போகிறவர்களுக்கு மட்டும் அவர் குருசாமி அல்ல. உடல் நலம் பேண விரும்புகிறவர்கள், முறையான உணவுப் பழக்கத்தை மேற்கொள்ள விரும்புகிறவர்கள், வாழ்க்கையில் நடிப்பதில்லை என்று சபதம் செய்துகொள்ள விரும்புகிறவர்கள் என்று பலருக்கு அவரே குருசாமி. அவர் வில்லனாக நடித்தார்; ஹீரோவாக வாழ்ந்தார்! ●

# பாடகி குஷ்பு!

நட்சத்திரம் நட்சத்திரம் பூமியில் பாரு
தினம் ராத்திரியில் உன் கனவில் யாரு
ரசிகனோட கைதட்டுல ஏறுது போதை
ஒரு ரகசியத்தைச் சொல்லட்டுமா
காதுல கேளு...

'மகனே என் மருமகளே' படத்துக்காக முதன் முதலாக குஷ்பு தன் சொந்தக் குரலில் பாடிய பாடல் இது. பாடலை எழுதியவர் கவிஞர்: சினேகன், இசை: தினா. இயக்கம்: டி.பி.கஜேந்திரன்...

